


பூருவா சாரியர்கள் போதம் அநுட்டானங்கள்
கூறுவார் வார்த்தைக்ளைக் கொண்டு நீர்தேறி
இருள் தருமா ஞாலத்தே இன்பமுற்றுவாழும்
தெருள் தருமா தேசிகனைச் சேர்ந்து.

--மாமுனி

(இது இருள் தரும் பெரியபூமி. நிலையான இன்பம் இங்கு இல்லை. உண்மைகளைத் தேர்ந்து, நன்மைகளைச் சார்ந்து, நிலையான இன்பத்தை அடைவதே அறிவுடைய செயலாகும். அதற்கு இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களும், அவர்களை அடியொற்றி வாழ்ந்து வந்த ஆசார்யப்பெருமக்களும், அடியார்களும் காட்டிய வழி ஒன்றே நமக்கு உறுதியானப் புகலிடமாகும்.)

# ஸப்தகிரி

## நவம்பர் - 1994


தனிப்பிரதி ரூ. 2 | மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 | இதழ் 6



சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.எஸ். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

பொறுப்பாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : புஷ்ப யாகம் - திருமலைக்கோயில்.

முதல் உள்ளட்டை : 'நரகாசுரவதம்' - சித்திரம்: மாஸ்ரீ

2-வது உள்ளட்டை : நரக சதுர்த்தி - சித்திரம்: மாஸ்ரீ.

பின்னட்டை : ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில் வாடபல்லி-கிழக்குக்கோதாவரி மாவட்டம் (ஆ.பி.)



# மதிப்புரை

## அகில இந்திய இந்துத் திருத்தலங்கள் புனித யாத்திரை

[ஆசிரியர்: வானமாமலை இராமாநுஜதாசன் (A. ஐயப்ப ரெட்டியார்) -8/1 (மனை எண் 34) எல்.ஐ.சி. குடியிருப்பு, டாக்டர் இராதாகிருஷ்ணன் தெரு, திருவான்மியூர், சென்னை-600041 பக்.362 விலை ரூ.55-00]

இறைவனை அநுபவிப்பது பலவகைப்படும். அவற்றில் ஒன்று திருத்தலப் பயணத்தை மேற்கொண்டு திருக்கோயில்களில் அர்ச்சை வடிவில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களை தரிசித்து அவர்களது திருவருளைப் பெறுவதாகும். புனித நிலமாகிய நம் பாரத நாட்டில் பாடல்பெற்ற சிவத்தலங்கள் 274 என்றும், மங்களாசாசனம் பெற்ற திருமால் தலங்கள் 108 என்றும் கணக்கிட்டு வைத்துள்ளனர் நம்முன்னோர்கள். இந்நூலாசிரியர் திரு. A. ஐயப்பரெட்டியார் (வானமாமலை இராமநுஜதாசன்) சிவத்தலங்களில் 268ஐயும் வைணவத்தலங்களுள் 97 ஐயும் நேரில் சேவித்துப் பேரின்பம் பெற்றவர். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற திருவாக்கின்படி இந்தத் திருக்கோயில்கள் பற்றிய குறிப்புகளைப் பதிவு செய்து நமக்கு நூல் வடிவில் வழங்குகின்றார்.

நூலின் தொடக்கத்தில் 1. மலைநாட்டுத்திருபபதிகள் 2. கொங்குநாட்டுத்தலங்கள், 3. துளுவநாட்டுத்தலங்கள், 4. வடநாட்டுத் திருப்பதிகள், 5. தொண்டைநாட்டுத் தலங்கள், 6. நடுநாட்டுத் தலங்கள், 7. சோழநாட்டுத் தலங்கள், 8. ஈழநாட்டுத் தலங்களில், 9. பாண்டிநாட்டுத் தலங்கள், 10. இப்பூவுலகில் பார்க்கமுடியாத தலங்கள் என்று வகைப்படுத்தி ஒவ்வொரு பிரிவுகளிலும் உள்ள சைவ, வைணவத் திருத்தலங்களைப் பாகுபாடு செய்து பட்டியலிட்டுக் காட்டுகின்றார். தவிர, புராணத்தலங்களையும், அபிமானத்தலங்களையும் பட்டியலிட்டுப் பிரித்துக் காட்டுகின்றார்.

அடுத்து, ஒவ்வொரு தலத்தின் புராணவரலாறு, செல்லும் வழி, மூர்த்திகள் எழுந்தருளியிருக்கும் நிலை விமானம், தலவிருட்சம் முதலியவற்றையும் தெளிவாகததருகின்றார். பாடிய சைவ சமயக்குரவர்கள் மங்களாசாசனம் செய்த ஆழ்வார்கள் பாடல்கள் பாசுரங்கள் விவரங்களையும் தருகின்றார். அடியேன் 102 வைணவ திவ்ய தேசங்களைச் சேவித்தும் சந்நிதிகளில் ஆழ்வார் பாசுரங்களைச் சேவித்தும் பகவதநுபவம் பெற்றவன். 108 திருப்பதிகளையும் 6 நூல்களாக வெளியிட்டு மகிழ்ந்தவன். ஆகவே, "பாம்பின் கால் பாம்பறியும்".

இந்த நூலாசிரியர் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத்துறையில் அலுவலராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவராதலால் ஒவ்வொரு விவரத்தையும் தெளிவாகக் கூறியுள்ளார். உண்மையான பக்தருமாதலால் கூறும் செய்திகளும் புனிதமடைகின்றன. விலைவாசிகள் ஏற்றம் மிக்க இன்றையநிலையில் நூல் மலிவான பதிப்பு. திருத்தலப் பயணிகட்குப் பயன்படும் கையேடு; சரியான வழிகாட்டி.

-பேராசிரியர் டாக்டர்
ந. சுப்புரெட்டியார்-சென்னை.

✠ ✠ ✠ ✠

# உங்களுடன்....

ஒரு நாஸ்திகன் ஓர் ஆஸ்திகனைப் பார்த்துக் "கடவுள் இருக்கின்றானா; எங்கும் இருக்கின்றானா, எப்போதும் இருப்பானா" என்று அடுக்கடுக்காகக் கேள்விகள் கேட்டான். அதற்கு அந்த ஆஸ்திகன் "இருக்கின்றான். எங்கும் எப்போதும் இருக்கின்றான்" என்று கூற "இருக்கானா, அப்படியெனில் அவனை எனக்குக் காட்டு" என்று நாஸ்திகன் கேட்க, ஆஸ்திகன் மௌனம் காட்டினான். ஒரு சில நிமிடங்கள் கழித்து, ஆஸ்திகன் தன் கையி லிருந்த வாழைப்பழத்தை நாஸ்திகனிடம் கொடுத்துச் சாப்பிடச் சொன்னான். அவனும் மகிழ்ச்சியுடன் சாப்பிட்டான். உடனே ஆஸ்திகன் சாப்பிட்டவனைப்பார்த்து "பழம் எப்படி இருந்தது" என்று கேட்க, அவனும் "மிகவும் இனித்தது" என்று பதிலிறுத்தான். ஆஸ்திகன் "என்ன இனித்ததா, எங்கே காட்டு பார்க்கலாம். நான் உடனே பார்க்க வேண்டும்" என்று கூற, நாத்திகன் "பைத்தியக்காரா இனிப்பை எப்படிக் காட்டமுடியும். பழத்தை நீ சாப்பிட்டால்தான் அதன் சுவை உனக்குத் தெரியும்" என்று சிரித்துக்கொண்டே பதில் சொல்ல, "நண்பா, எப்படி நீ அனுபவித்த பழத்தின் சுவை உணர்வைப் பிறர்க்குக் காட்டமுடியாதோ, அதுபோல்தான் நான் பார்த்த கடவுள் உணர்வை உனக்குக் காட்ட முடியாது. அத்னை அவரவர்கள்தாம் உணர்ந்து மகிழ்ந்திட முடியும்" என்று ஆஸ்திகன் பதில் அளிக்க, நாஸ்திகன் இப்போது மௌனம் சாதித்தான். ஆஸ்திகனது பதில் நாஸ்திகனுக்கு உடனடியாக உடன்படவில்லையென்றாலும், அப்பதில் அவன் உள்ளத்தில் சிறிதே ஒரு சலனத்தைத் தோற்றுவித்தது. இதுபோது அவன் மனமும் அறிவும் இணைய ஆரம்பித்தால் அவன் உள்ளத்தில் இறைவனைப் பற்றிய உண்மை தெளிவடையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

'கடவுள் இல்லை' என்று நம்பும் உண்மை நாஸ்திகனால் எந்தவித இழப்போ, பிரச்ச னையோ இச்சமுதாயத்திற்கு இல்லை. 'கடவுள் இருக்கின்றான்' எனும் உண்மை ஒளியினை அவன் காண நேரிடும் அடுத்தக்கணம் அவன் நிலை ஒரு ஞானியாகத்தான் உயரும். ஆனால் பிரச்சனைகளும், குழப்பங்களும் உண்டாவது இன்பத்தில் இறைவனை மறந்தும் துன்பத்தில் இறைவனை இகழ்ந்தும் விளங்கும் மக்களால்தான். இவர்கள் தாங்களும் குழம்பி, மற்றவரையும் குழப்பித் தன்னலமிக்க ஆஸ்திகராக விளங்குகிறார்கள். அவ் வப்போது நிலைதடுமாறும் ஆஸ்திகர்களுக்குக் கடவுள்பற்றிய - சமயம் பற்றிய அறிவு, உணர்வு மிகவும் முக்கியமாகும்.

ஒவ்வொரு யுகத்திலும், 'கடவுள்' பல உருவங்களில் பல அவதாரங்களின் மூலம் தன்னை நேரிடையாகவும், மறைமுகமாகவும் வெளிக்காட்டிக்கொண்டு தர்மத்தினைக் காத் திடும்முகத்தான் இம்மண்ணில் சமய உணர்வினை - கடவுள் நம்பிக்கையினைக் காத்து வளர்த்து வந்தான். கலியுகத்தில் ஏன் அவ்வாறு இறைவன் மற்றொரு அவதாரம் கொள்ளவில்லை எனும் ஐயம் பலருக்கும் எழலாம். கலியுகம் முன்புவரை ஒவ்வொரு யுகத்திலும் ஒருவன், ஒருசிலர்; ஒன்று, ஒருசில என்ற வகையில் தீயோரும், தீமைகளும் நிலவியபோது, சிலரை - சிலவற்றை அழித்துப் பல்லோரைக் காக்க பகவான் இம்மண்ணில் அவதாரம் எடுத்தான். ஆனால் கலியுகமானது தீமைகளின், தீயோரின் நிலைக்களமாக மாறிய போது, பலரை அழித்து ஒருசிலரைக் காக்கும் நிலை ஏற்பட்டபோது 'மனிதன் தானாகத்திருந்தினால்தான் இச்சமுதாயம் உயர வழி இருக்கும்' என்ற நிலை தோன்றியது.

மனிதன் தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டுமாயின் முதலில்அவன் பிற உயிர்களை மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்; தர்மநெறியின் பெருமையினை உணர்ந்து கொள்ள வேண்டும்; தன் பிறவியின் நோக்கத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். இவையாவும் சமயம் ஒன்றுதான் அவனுக்குக் கிடைக்கச்செய்யும். மற்றைய சமயங்களில் சமயக் கோட் பாடுகளுக்கும், வாழ்க்கை வழிமுறைகளுக்கும் இடையே பெருத்த இடைவெளி உண்டு. அங்கு உரிமைகள் வித்யாசப்படுகின்றன. சட்டங்கள் வகுக்கப்படுகின்றன. ஆனால் இந்து சமயத்தில்தான் மனிதன் மனித நேய உணர்வுடன் வாழ வகைசெய்யப்பட்டுள்ளது. தனி மனிதச் சிறப்பே சமுதாய மேம்பாட்டிற்கு இட்டுச் செல்லும் என்பதற்கிணங்க வாழ்க்கையும் சமயமும் இணைந்தே - இணைக்கப்பட்டே உள்ளது. அதனால்தான் இறைவழிபாடு

இந்து சமயத்தில் ஒரு சடங்காக மேற்கொள்ளப்படவில்லை. அது வாழ்க்கை நெறியாக அமைந்துள்ளது. இறைவனை மறந்தானாயின் அவன் தன்னை மறந்தவனாகின்றான். அவ்வாறு அவன் மறக்கக்கூடாது என்பதற்காகத்தான் கடவுள் உறையும் கோயிலை, ஊரே காணும்படி கோபுரங்களுடன் கட்டிவைத்தனர் நம் ஆன்றோர். வேப்ப மரங்களிலும், ஆற்றங்கரைகளிலும், கடலோரங்களிலும் ஆக இயற்கையின் பின்னணியில் கடவுளர்களை கல்லிலும், மரத்திலும் இடம்பெறச்செய்து சமயத்தைத் தங்கள் அன்றாட வாழ்க்கையோடு சேர்த்துக்கொண்டனர்.

இத்தகு பெருமையும் சிறப்பும் தன்னகத்தே கொண்ட இந்து சமயத்தைச் சார்ந்த இம்மண்ணின் மைந்தர்கள் தாங்கள் வழிபடும் கடவுளர்களைப் பற்றி, தாங்கள் சார்ந்துள்ள சமயத் தத்துவங்களைப் பற்றிச் சிறிதும் அறிந்துகொள்ள முடியாமல், அக்கடவுளர்களைப் போற்றிடும் வாழ்க்கை இலக்கணத்தை விளக்கிடும் வேதங்கள், உபநிடதங்கள், இதிஹாஸ புராணங்கள் ஆகியவற்றைப் புரிந்துகொள்ள முடியாமல், கலியுகத்திற்கே உரிய வாழ்க்கைச் சூழ்நிலையில் தத்தளித்த போது, அவர்களுக்கு உதவிடும் வகையில் இப்புண்ணிய பூமியில் அக்கடவுளர்களின் அம்சமாக, தூதர்களாக எண்ணற்ற மெய்யடியார்கள் பிறந்தனர். அவ்வாறு பிறந்த அவர்களில் பலர் தங்களை வெறும் மகான்களாக மட்டும் காட்டிக் கொள்ளாமல், மக்களின் மன உளைச்சல்களை நீக்கி, ஆன்மீகத்தாகத்தினைத் தீர்த்திடும் வகையில் அவ் இறைவனைப் பற்றி வேதவழி நின்று, நமக்குத் தங்கள் மெய்ஞானத்தின் மூலம் — எழுத்தாற்றல் மூலம், பல உண்மைகளை விளக்கிச் சென்றுள்ளனர்.

அம்மெய்யடியார்களை ஆழ்வார்களாகவும், நாயன்மார்களாகவும், தாசர்களாகவும், ஆசார்யர்களாகவும் இப்பூமி தன்னகத்தே கொண்டு தன்னை மேலும் புனிதப்படுத்திக்கொண்டது. பகவானைவிட அப்பகவானைத்தொழுதிடும் அடியார்களுக்கும் ஏற்றம் தந்து தன்னை மேலும் பெருமைப்படுத்திக்கொண்டது வைணவ நெறி. எண்குணத்தானாகிய அம்மாயவனின் அருள் வெள்ளத்தில் மூழ்கி, தாங்கள் அனுபவித்த ஆன்மீகக் கருத்துக்களைத் தங்களுடைய நாலாயிரம் பாடல்களின் மூலம் அள்ளித்தெளித்த ஆழ்வார்கள் பன்னிருவரும் இம்மண்ணில் நம் முன்னோர் காண நடமாடிய இறைத்தூதர்களேயாவர். வேதங்கள் சுட்டிக்காட்டிய வாழ்க்கை உண்மையினை, பரம்பொருளின் பேருண்மையினை விளக்கமாக, எளிமையாக, நுண்ணியதாக எடுத்துக்காட்டியதால்தான் 'நாலாயிரம்' 'தமிழ்மறை'யாயிற்று. இச்சிறப்பின் அருமையினை ஒருசிலர்தான் அனுபவிக்க முடிந்தபோது, அதன் பெருமையினைப் பலரும் அறிந்து இன்புறும் வண்ணம், ஒரு சிறுகுழந்தையைக் குடும்பத்தில் பலரும் பலவிதமாக கொஞ்சிடும் வகையில், அவ் ஆழ்வார் பாடல்களுக்கு 'வியாக்யானம்' 'ஈடு' என்று உரைபல எழுதி வைணவ சமய இலக்கிய உலகில் தங்களுக்கென ஒரு தனியிடம் பெற்றனர் பின்னர் வந்த ஆசார்யப்பெருமக்கள். இதனால் ஆண்டவனின் அருட்திறத்தை மட்டுமின்றி, ஆழ்வார்களின் கருணைத்திறத்தையும் புலமைத் திறத்தையும் உணர வழிவகுக்கப்பட்டது. பின்னர் ஆசார்யர்கள் அனுபவித்த வைணவப் பக்திப் புனலில் சாமான்யரும் மூழ்கித் திளைத்திடும் வகையில், தாசர்கள் எனும் இசைக்கவிஞர்கள் இசை மூலம் பக்தியினை பரவச்செய்தனர்.

இவ்வாறு காலத்திற்கும், வாழ்க்கைக்கும் ஈடு கொடுத்திடும் வகையில் ஆழ்வார்கள், ஆசார்யர்கள், தாசர்கள் எனும் வரிசையில் பக்திப் பயிர் வளர்த்தவர்களான முதலாழ்வார்கள், திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நிகமாந்த மகாதேசிகன், கனகதாசர், குருஜகன்னாத தாசர் ஆகியோரின் திருஅவதார நாட்கள் இம்மாதத்தில் ஒருசேர இடம்பெற்றது, அவர்கள்தம் படைப்புக்களையும், வாழ்க்கை நெறிமுறைகளையும் எண்ணி, நாம் நமது வாழ்க்கையினை மேம்படுத்திக்கொள்ள ஒரு வாய்ப்பாகும் என்று கருதினால் அது நமக்குக்கிடைத்தது நாம் செய்த பெரும் பேறாகும். அவர்கள்தம் சமய வாழ்வு நம்முடைய அன்றாட வாழ்விற்கு ஒருவழிகாட்டியாக அமைந்திட அவர்கள்தம் திருவடிகளை, அவர்கள்தம் பாசுரங்களைக்கொண்டு போற்றி, நம்மை நாம் உயர்த்திக் கொள்வோமாக!

***

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## ஏழாம் அத்தியாயம்

# ஞான விக்ஞான யோகம்

உ. வைப்ரியன்

**கண்ணன் கூறியது :**

மய்யாஸக்தமனா : பார்த்த யோகம்
யுஞ்ஜன்மதாச்ரய : ।
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா
ஞாஸ்யஸி தச்ச்ருணு ।। (1)

"பார்த்திபா, என்னுடன் இசைந்த மனதுடன், என்னையே சரணமாகக் கொண்டு, எந்தவித சந்தேகமுமில்லாமல் என்னை எவ்வாறு முழுவதுமாக அறிவது என்பதைச் சொல்கிறேன், கேள்."

[ஒருவன் நன்றாக எழுதுகிறான் என்றால், அவன் நன்றாகப்படித்திருக்கிறான், சூழ்நிலையை நன்றாக அனுபவித்திருக்கிறான் என்பதே பொருள். அவ்வாறு எழுதத்தெரியாதவன் மற்றவர் பேசுவதைக் கேட்கவேண்டும். அப்போதுதான் கேட்பவனுடைய அறிவு விரிவடைகிறது. ஆம் கேள்வி ஞானமே ஒருவனுடைய அறிவை, நிலையை உயர்த்துகிறது. இங்கு, இறை உண்மை தெரியாதவனுக்கு இறைவனே தன்னை விளக்குகின்றான். அதற்கு மற்றைய உலகாயுத ஆசைகளில் விருப்பு இல்லாது, ஒரு முனைப்புடன் கூடிய சூழ்நிலை வேண்டும். அப்போதுதான் எந்தவிதக் குழப்பமும் இன்றி இறை உண்மையை அறிந்து, அதனால் பக்தி எனும் உயர் உணர்வ நம்முள் எளிதாகப் பிறக்கும்.]

ஞானம் தேஅஹம் ஸவிக்ஞான்மிதம்
வக்ஷ்யாம்யசேஷத : ।
யக்ஞாத்வா நேஹ பூயோ அந்யஜ்
ஞாதவ்யமவசிஷ்யதே ।। (2)

"அறிவியலோடு (விக்ஞானத்துடன்) கூடிய இந்த அறிவை (ஞானத்தை) சிறிதும் பாக்கியில்லாமல் நான் உனக்குக்கூறுகிறேன். இதை அறிந்தால் நீ இனிமேலும் அறிந்து கொள்வதற்கு ஏதும் இல்லை."

[இங்கு ஞானம் என்பது சிந்தனை செய்யும் திறமை அல்லது அறிவு என்பதாகும். விக்ஞானம் என்னும் அறிவியல் என்பது, நடைமுறையில் மேற்கொள்ளும் அறிவாகும். சிந்தனையால் பெற்ற அறிவினை செயலில் மேற்கொள்ள வேண்டும். செயலளவில் உயர் அறிவை, இறை அறிவை, இறை உண்மையை அனுபவிப்பவனுக்கு, வாழ்க்கையில் மேலும் கற்றுக்கொள்வதற்கு ஏதும் இல்லை.]

மனுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு
கஸ்சித்யததி ஸித்தயே : ।
யததாமபி ஸித்தானாம் கஸ்சின்மாம்
வேத்தி தத்வத : ।। (3)

"ஆயிரக்கணக்கான மனிதர்களிடையே ஒருவன்தான் மனதில் எழும்பும் ஆசை காரணத்தால் முயற்சியை மேற்கொள்கிறான். இவ்வாறு முயற்சி மேற்கொள்ளும் அந்த நல்லவர்களில்கூட ஒருவன்தான் என்னை உள்ளபடி அறிந்துகொள்கிறான்."

[சித்தி என்றால் கொண்ட குறிக்கோள் நிறைவு பெறுதல், முக்தி, வெற்றி என்று பலவாறு பொருள்படும். இங்கே மனமானது இறைவனைக் காணுதற்குரிய பக்குவத்தை அடையும் நிலையினைக் குறிக்கிறது. ஒரு மா மரம் நன்றாக காய்க்கிறது. பிறகு அக்காய்கள் பழுத்து அதில் உள்ள கொட்டைகள் பிறகு மாமரங்கள் முளைக்க உதவுகின்றன. தன் இனவிருத்திக்காக அம்மரம் காய்க்கிறது. ஆனால் மாமரம் தந்திடும் எல்லா கனிகளும் விதைகளாவதில்லை. ஏனென்றால் அவற்றில் பல, பல உயிர்களுக்கு உணவாகின்றன. ஒரு சில மாங்கொட்டைகள் நிலத்தின் காரணமாக முளைப்பதில்லை. ஆகவே ஒரு சில மாங்கொட்டைகளுக்குத் தாம் மரங்களாகின்ற வாய்ப்பு அமைகின்றன. அதே போன்றுதான் மனித இனமும். மனிதப்பிறவி அந்த இறைவனை அறிவதற்காகத்தான் ஏற்பட்டுள்ளது. ஆனால் ஒரு சிலர் மனதில்தான் அந்த இறையின்பத்தை அனுபவிக்கத் தோன்றுகின்றது. அவ்வாறு தோன்றுபவர்களில்கூட ஒருசிலர்தான் இறை உண்மையை அறிகின்றனர். இறைவனை அனுபவிக்கின்றனர். ஆகவே அடைய வேண்டிய குறிக்கோள் எவ்வெளவுக்கெவ்வளவு உன்னதமாக அடைகிறதோ,அவை அடையும்

முயற்சிகளோ வாய்ப்புகளோ குறைவாக இருக்கின்றன.]

பூமிராபோ அனலோ வாயு:
கம் மனோ புத்திரேவ ச : ।
அஹங்கார இதியம் மே பின்னா
ப்ரக்ருதிரஷ்டதா ।। (4)

"மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், அறிவு, மமதை என்று இவ்வாறு எட்டு வகையாக என்னுடைய இயற்கை பிரிவு பட்டிருக்கின்றது."

[இந்த உலகத்திற்கு முதல் காரணமாக இருப்பது இயற்கையாகும். இந்த இயற்கையானது ஐம்பூதங்களின் விரிவான 24 தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. அதாவது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐம்பூதங்களும், நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்ற அந்த ஐம்பூதங்களின் குணங்கள் ஐந்தும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களும், செயல் உறுப்புகளான வாய், கை, கால், குதம், ஆண்குறி என்ற ஐந்தும் ஆகிய இருபதும் இவற்றிற்கு உரியவனான மனிதனும், அவனுக்கு உதவி புரிந்திடும் கருவிகளான மனம், அறிவு, அகங்காரம் எனும் மமதை எனும் மூன்றும், ஆக மொத்தம் 24 தத்துவங்களாக இந்த இயற்கையானது பிரிவு பட்டுள்ளது.]

அபரேயமிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம்
வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம்
தார்யதே ஜகத் ।। (5)

"இது (மேற்சொன்ன) என்னுடைய கீழான, இழிவான இயற்கையாகும். இதனைவிட மேலானதும், உயிராக இருப்பதுமாகிய என்னுடைய இயற்கையை அறிந்துகொள்வாயாக. அகன்ற தோள்களை உடையவனே! இந்த உலகமானது இதன்மீதுதான (இந்த இயற்கையின் மீதுதான்) ஆதாரப் பட்டுள்ளது."

[மேற்சொன்ன 24 கூறுபாடுகளை உடைய ஐம்பூதங்கள் கீழான நிலையாகும். இந்த ஐம்பூதங்களால் இந்த உடல் உருவாக்கப்பட்டுள்ளது. இது அறியும்தன்மை கொண்டது. ஆனால் இந்த உடலில் இருக்கும் ஜீவபோதமானது - ஆத்மாவானது இறைவனின் மேலான இயற்கைத்தன்மையாகும். அதாவது ஒரு பொருள் எரிகிறது. எரியும் நெருப்பிலிருந்து எழும் புகையானது அந்நெருப்பின் கீழான இயற்கையாகும். கீழான நிலையாகும். அந்த நெருப்பிலிருந்து எழும் ஒரு பொறியானது அந்த நெருப்பின் மேலான இயற்கையாகும். ஏனென்றால் அந்த நெருப்பின் ஆற்றல் அந்தப் பொறிக்கும் உண்டு. ஆம் இறைவனாம் நெருப்பின் தன்மையை கொண்டது பொறியாகிய உயிர்களின் ஆத்மாவாகும். ஆனால், நெருப்பின்றிப் பொறி சற்றே விலகி இருக்கிறது. இங்கே மேலான அந்த இயற்கையின் ஆத்மாவானது இந்த உடலில் அமைந்து, அதற்கு ஆதாரமாக உள்ளது.]

ஏதத்யோனீனி பூதானி
ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத்
ப்ரபவ: ப்ரலயஸ்ததா ।। (6)

"உயிர்கள் எல்லாமும் இந்த இரண்டு (மேற்சொன்ன) இயற்கையிலிருந்துதான் தோன்றின என்பதைத் தெரிந்துகொள்வாயாக! நானே இந்த உலகமனைத்தின் தோற்றத்திற்கும் மறைவிற்கும் காரணமாவேன்."

[இந்த வாழ்வானது மேலான இயற்கையான உயிரும் உடலும சேர்ந்தபோது கிடைககிறது. இந்த இரண்டும் சேரும் போதுதான் வாழ்க்கையோட்டம் நடைபெறுகிறது. மேகக் கூட்டங்களானது ஆகாயத்தில் தான் தோன்றுகின்றன. ஆகாயத்தில்தான் நகர்ந்து செல்கின்றன. பிறகு ஆகாயத்திலேயே மறைந்து போகின்றன. அது போன்றே இந்த உலக உயிர்கள் யாவும் இறைவனிடம்தான்



தோன்றுகின்றன. அந்த இறைவனிடமே ஒடுங்கி விடுகின்றன.]

*மத்த: பரதரம் நான்யத்கிஞ்சி*
*தஸ்தி தனஞ்ஜய ।*
*மயி ஸர்வமிதம் ப்ரோதம்*
*ஸூத்ரே மணிகணா இவ ॥ (7)*

"தனஞ்ஜயா, என்னைக்காட்டிலும் மேலானது வேறு எதுவும் இல்லை. நூலில் மணிகள் இருப்பது போன்று, எல்லாமே என்மீது சேர்க்கப்பட்டிருக்கின்றன."

[எல்லா பொருள்களின் உற்பத்திக்கும், அழிவுக்கும் காரணம் அந்த இறைவன்தான். மேலும் அந்த எல்லா உயிர்களின் இயக்கத்திற்கும் அவன்தான் காரணம். அவனுடைய சுழற்சியை யாராலும் தடுத்திடமுடியாது. அவனுக்குத் தெரியாது எந்தப்பொருளும் தோன்றிடமுடியாது. இறைவன் ஒருநூல் போன்றவன். அந்த நூலில் எந்தவித வேறுபாடும் இல்லை. ஆனால் அந்த நூலில் சேர்க்கப்பட்டிருக்கும் - கோர்க்கப்பட்டிருக்கும் பொருள்களோ முத்து, பவளம், ரத்தினம் என்று பல்வேறு இயல்புகளைக் கொண்டவையாகும். அதுபோன்று என்றும் ஒன்று போல் இருக்கும் இறைவன் மீது, பல்வேறு குணங்களை, உருவங்களைக் கொண்ட உயிர்கள் ஆதாரப்பட்டிருக்கின்றன.]

*ரஸோ அஹமப்ஸு கௌந்தேய*
*ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ: ।*
*ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த:*
*கே பௌருஷம் ந்ருஷு ॥ (8)*

"குந்தியின் புதல்வனே! நான் நீரில் அதன் சுவையாகவும், சூர்ய சந்திரனில் அவற்றின் ஒளியாகவும், வேதங்கள் எல்லாவற்றிலும் அவற்றின் ஓங்கார ஒலியாகவும், வானத்தில் ஓசையாகவும் மனிதர்களிடையே அவர்களின் ஆற்றலாகவும் இருக்கிறேன்."

[நீருக்கு என்று தனியாக சுவை ஒன்றும் கிடையாது. ஆனால் அந்த உமிழ்நீரைக் கொண்டுதான்,. வாயில் மெல்லுவது கற்கண்டா, கல்லா, படிகாரமா என்பது தெரியவரும். சுவை அறிதற்கு நீர் தேவை. ஆம் அந்த நீரிலே சுவையறியும் தன்மை மறைந்திருக்கிறது. மறைந்திருக்கும் அந்தத் தன்மையின் சிறப்பே இறைவன் என்பது. வெளிச்சம் இல்லாவிட்டால் எந்தப் பொருளும் கண்களுக்குப் புலனாகாது. விக்ஞானத்தின் அதிசயத்தால் கண்டுபிடிக்கப்பட்ட மின்விளக்கால் ஒரு குறிப்பிட்ட பரப்பில் உள்ள பொருள்களைத்தான் காணமுடியும். அந்த மின்சாரமும் நீர் போன்ற இயற்கையின் மீதே ஆதாரப்பட்டுள்ளது. ஆனால் தவறுது வானத்தில் தோன்றி மறையும் சந்திரன் மற்றும் சூரியன் தரும் வெளிச்சத்திற்கு ஈடு இணை ஏதும் இல்லை. அந்த வெளிச்சத்தினால்தான் இயற்கையின் பெருமை, சிறப்பு அறிந்துகொள்ளமுடியும். அத்தகு ஆற்றல் உள்ள சந்திரன் மற்றும் சூரியன் ஆகியவற்றின் ஒளியாக அந்த இறைவன் இருக்கின்றான். ஞானம் மற்றும் விக்ஞானம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பன ஐம்பூதங்கள். அவற்றில் ஒன்றான ஆகாயத்தின் குணம் ஒலியாகும். வானம் இல்லாவிடின் ஒலி பிறக்காது. ஆனால் அந்த ஒலியை நம்மால் காணமுடியாது. அது போன்று இறைவன் வானத்தில் ஒலியாக கலந்துள்ளான். இந்த ஒலியால் மொழி பிறந்தது. எல்லா ஒலிக்கும் அடிப்படையாக இருப்பது ஓம் எனும் ஓங்காரமாகும். இதுவே எல்லா வேதங்களுக்கும் உயிராக இருப்பது. ஓங்காரத்தின் விரிவே வேதங்களாகும். அந்த ஓங்காரமாக இருப்பது இறைவன். மற்றைய உயிர்களைக் காட்டிலும் உயர்ந்தது மனிதப் பிறவி. அவனை பலவகைகளிலும் உயர்த்துவது அவனிடம் உள்ள ஆற்றலாகும். அந்த ஆற்றலால்தான் அவன் சிறப்பான, மேன்மையான செயல்களைச் செய்யமுடிகிறது. அத்தகு மனிதன் மூலமாகத்தான் இறைவனின் பெருமை, அவன் படைப்பு பாராட்டப்படுகிறது. அத்தகு மனித ஆற்றல்தாம் இறைவன்.]

*புண்யோ கந்த: ப்ருதிவ்யாம்*
*தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।*
*ஜீவனம் ஸர்வ பூதேஷு*
*தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥ (9)*

"மண்ணில் நல்ல வாசனையாகவும், நெருப்பினில் சுடராகவும் நான் இருக்கின்றேன். எல்லா உயிர்களிடத்தும் அவற்றின் துடிப்பாகவும், தவம் மேற்கொள்ளும் முனிவர்களின் தவமாகவும் நான் விளங்குகின்றேன்."

[மண்ணில் எல்லாவிதமான வாசனை, மணம் எழலாம். ஆனால் நல்ல வாசனை - நறுமணம் ஒன்றே நம்மிடையே ஒரு தெய்வீக உணர்வை தோற்றுவிக்கிறது. குப்பைக்கூளங்களை எரித்திடும் போது எழும்புகை நம்மை நம் மூக்கை மூடிக் கொள்ளச்செய்கிறது. அதே நேரத்து சாம்பிராணியில் எழும் புகை நம்மையறியாமல் நம்மிடம் ஒரு அமைதியை, நம்மைச் சுற்றி அன்பானச் சூழ்நிலையை

ஏற்படுத்துகிறது. அத்தகு நறு மணமாக மண்ணில் இறைவன் இருக்கின்றான். சூரியனுடைய பிரதிபலிப்பாக நெருப்பு இருக் கின்றது. ஆத்ம ஒளியின் வெளித்தோற்றமே அந்நெருப்பா கக் கருதப்படுகிறது. அழி யும் உடல்களுக்குள் உயிர்களாக, ஆத்மாவாக இறைவன் திகழ் கின்றான். உயிரால் அந்த உடல் வாழ்கிறது. அந்த உயிரே இறைவனாவான். எல்லா உயிர் களும் வாழத்தான் செய்கின் றன. ஆனால் மனித உயிர்க் கும் மற்றைய உயிர்களுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. மனிதன் தன்னை செயலா லும், வாழ்க்கை முறையாலும் மேம்படுத்திக்கொள்ள முடியும். அவ்வாறு மேம்படுத்திக்கொள்ள மனிதன் மேற்கொள்ளும் முயற் சியே ஒரு மாபெரும் தவ மாக அவரவர்களுடைய வாழ்க் கையில் அமைகின்றது. அத்தகு தவத்தை மேற்கொள்ளும் மனி தர்களே முனிவர்கள். அந்த முனிவர்களின் தவம் போன்று மனிதனிடம் இறைவன் இருக் கின்றான்.]

பீஜம் மாம் ஸர்வபூதானாம்
வித்தி பார்த்த ஸனாதனம் ।
புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்,
தேஜஸ் வினாமஹும் ।। (10)

"பார்த்தா, எல்லா உயிர்களுக் கும் இன்றியமையாத வித்தாக நான் இருக்கின்றேன் என்பதை அறிந்துகொள். அறிவுடை யோர்களின் அறிவாக, பேரொ ளியாளர்களின் பேரொளியாக வும் நான் இருககின்றேன்."

[வித்தென்பது இன்றியமை யாத, அவசியமான, ஆதாரமான ஒரு நிலையாகும். மழைக்கு கட லானது வித்தாக உள்ளது. எப் படியெனில், கடல்நீர் ஆவியாகி வான் சென்று மேகங்களாக மாறுகின்றன. பிறகு மேகம் ஒருநிலையில் மழையாக மாறு கின்றது. மாறிய மழை மறு படியும் கடலையே அடைகின் றது. ஆகவே கடலே மழைக்கு ஆதாரமாகின்றது. ஆதாரமா னதே வித்தாகும். அதுபோன்று எல்லா உயிர்களுக்கும் பிறப்பி டமாக இறைவன் இருக்கின் றான். ஆகவே அவன் வித் தாக அமைகின்றான். ஒருவன் தன் அறிவால், சிந்தனையால் இயற்கை உண்மையை - இறை உண்மையை தெரிந்து கொள் கின்றான் என்றால் அவனு டைய அந்த அறிவு பேரறிவாக மாறியுள்ளது என்று பொருள். ஒருவனால் இறைவனைக்காண நேரிடுகின்றது என்றால், அவன் ஆத்மாவை அவன் அறிந்துள் ளான் என்று பொருள். ஆத் மாவை அறிந்த அறிவு மேன் மையானது. ஆகவே அத்தகு அறிவாளர்களின் - ஞானிகளின் அறிவாக இறைவன் இருக்கின் றான். ஓர் இடம் சுத்தமாக இருக்கும் போது அங்கு துர் வாசனை ஏற்படாது. வயிற் றில் பிரச்சனை என்றால், அது அவ்வயிற்றை உடையவனின் வாய் காட்டிவிடும். ஆம் வாய் நாறும். ஆகவே உடல் சுத்த மாக இருந்தால் உள்ளம் சுத் தமாக இருந்தால் தானாகவே அவனிடம் ஓர் ஈர்ப்புத்தன்மை பிறக்கும். அதனால் அவனிட மிருந்து ஓர் ஒளி தோன்றும். அதனை தேஜஸ் என்று கூறு வர். இந்த தேஜஸை, இறைவழி பாட்டாலும் இறைநினைப்பா லும் ஒருவன் தன்னுள் வளர்த் திட முடியும்.]

(தொடரும்)



## நன்கொடைகள்

திருமலைக்கோயிலுக்கு பல்வேறு காலக்கட்டங்களில் பல் வேறு அரசர்கள் நன்கொடைகள் பல வழங்கியுள்ளனர். அவற் றில் முக்யமான நன்கொடைகள் பின்வருமாறு :-

சேரமான் மகளும், இரண்டாவது பராந்தக சுந்தரசோழர் மனைவியுமாகிய இளவரசியானவள், கி.பி. 1001-ஆம் ஆண் டில், அதாவது முதல் ராஜ ராஜசோழன் அரசாட்சியின் 16-ஆவது ஆண்டின்போது, விலையுயர்ந்த கற்கள் பதித்த நெற்றிப்பட்டயம் ஒன்றினை இறைவனுக்கு வழங்கினாள்.

கி.பி. 10ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல்லவ அரசியான சாமவை என்பாள், இறைவனுக்கு வைரமுடி ஒன்றும், நான்கு இழைகளைக் கொண்ட கழுத்தாபரணம் ஒன்றும், இறைவ னுடைய கை, கால் ஆகியவற்றிற்கான ஆபரணங்களையும் வழங்கினாள். மேலும் மணவாளப்பெருமாள் எனும் பெய ரில் இறைவனின் வெள்ளி திருஉருவத்தையும் மலையில் பிரதிஷ்டை செய்தததாகத் தெரிகிறது. மேலும் இவ்வுற்சவத் திருமேனியின் திருவுலாவுக்கும், திருமலைக்கோயிலுக்குமென திருச்சுகனூரில் (இன்றைய திருச்சானூர்) நிலங்களையும் நன்கொடையாக அளித்துள்ளாள்.





# நெல்லை காந்திமதி



"சன்மிஷா"



மூங்கில் காட்டுக்கிடையில் ஒரு கிராமம்; மாட்டுத்தொழுவில் பால் கறந்து எடுத்து வருகிறான் ராமக்கோன். அவனறியாது தினமும் ஒரே இடத்தில் கால் இடறிக் குடத்திலிருந்து பால் சிந்துகிறது. பாவம் ஈசனின் திருவிளையாடலைப் புரிந்து கொள்ள இயலவில்லை. கோபமுற்றான் ஒரு நாள்; கோடறி எடுத்து வெட்ட முயன்றான், அங்கிருந்த மூங்கில் புதரை!

கைகள் உயருகின்றன. ஆனால் கண்கள் கூசுகின்றன. தன் காலடியில் ஒரு கோடி சூரியப்பிரகாச ஜோதி ஜ்வலிக்கின்றது. அவனையறியாமல் உடலில் ஒரு பதட்டம. கண்கள் கீழ் நோக்குகின்றன. தன்னை மறந்தான்; ஈசுவரனின் ஸ்வயம்பு லிங்கத்தைக் கண்டான். "ஆகா! என்ன பாக்கியசாலி நான்; அறியாமல் யாது செய்யத்துணிந்தேன். லோகநாதா! என்னை மன்னித்துக் காத்திடும்" என்று கன்னத்தில் போட்டுக்கொண்டான்.

இவ்வாறு தானாக சுவயம்புவாகத் தோன்றியவரே, இன்றும் காந்திமதி வடிவன்னையுடன் வேணுவனநாதராகவும், நெல்லையப்பராகவும் காட்சியளிக்கிறார்.

## சம்பந்தர் பாடல்

"மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தை செய் நன்னெஞ்சமே
பொருந்துதன்புறவினிற்
கொன்றை பொன்
சொரிதரத்துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர்
திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே"

என்று திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளால் புகழ்ந்து பாடப்பெற்ற இத்தலத்தை "வளம் பொழில் கடந்து, குளம் பல நிரப்பி இரு கரைவாரமும், திருமகள் உறையுளாப் பண்ணும் புண்ணிய தாமிரபரணி ஜீவ நதி" அலங்கரிக்கின்றது.

நான்கு புறமும் வயல்கள் வேலி போல் அமைந்துள்ள இத்திருப்பதியை "வேணுவன க்ஷேத்திரம்" என்று தலபுராணம் வர்ணிக்கின்றது. ஸால்வாடீஸ்வரர் என்று ஸ்வாமி நெல்லையப்பருக்கு வடமொழிப் பெயர். ஏன்? இம்மாவட்டத்தில் வீட்டுக்கு வீடு ஒரு நெல்லையப்பன் - காந்திமதி - ஸால்வாடி இருப்பார்களே!

## சான்றுக் கதை

வேணுவனம் எப்படி நெல்வேலியாக மாறியது என்பதற்குச் சான்று கீழ்க்காணும் புராணக் கதையாகும் - கோயில் அர்ச்சகர் வேத சர்மா ஆண்டவன் பூஜை நிவேதனத்திற்காகத் திறந்த வெளியில் நெல்லை நன்கு உலர்த்திவிட்டு நீராடச் சென்றார். பெருமழை பெய்தது. நெல்லுக்கு ஆபத்து வந்துவிட்டதே; எல்லாவற்றையும் மழை நீரோ, வெள்ளமோ அடித்துப் போயிருக்குமே' என்று கவலையுடன் விரைந்தார். ஆனால், அவர் கண்ட காட்சி என்ன?

வேலி போல் நின்று ஒரு சொட்டு மழைகூட நெல் காய்ந்த இடத்தில் விழாமல் இறைவன் காத்திருக்கிறார். பண்டைய காலத்தில் இந்த வட்டாரம் மூங்கில் காடாக இருந்திருக்கும் என்பது "வேணுவனம்" என்று இதனைக் குறிப்பிடுவதிலிருந்து தெரிகின்றது.

புராண வரலாற்றின்படி கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் முழுது கண்ட ராமபாண்டியனாலும், நின்றசீர் நெடுமாறனாலும் ஸ்வயம்புலிங்கேஸ்வரர் நெல்லையப்பருக்கும், இறைவி காந்திமதிக்கும் தனித்தனியாகத் தற்சமயம் திருநெல்

வேலி டவுன் என்றழைக்கப்படும் ஸ்தல மத்தியில் கோயில்கள் அமைக்கப்பட்டன.

கி.பி. 1647-ல் வடமலையப்ப பிள்ளையன் என்பார் ஒரு சங்கிலி மண்டபம் கட்டி இரண்டையும் இணைத்தார். மொத்தத்தில் 850 அடி நீளம், 756 அடி அகலம் கொண்ட எல்லையில் அமைந்துள்ளது. இந்த பிரம்மாண்டமான இணைப்புக் கோயிலில் கல்வெட்டுக்கள் பல உள்ளன. அதன்படி இத்தலம் "கீழ்வேம்பு நாட்டு குலசேகர சதுர்வேதி மங்கலம்" என்று அழைக்கப்படுவதுடன், இறைவன் "திருநெல்வேலி உடையார்" என்றும், இறைவியை "திருக்காகோட்டமுடைய நாச்சியார்" என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

குலசேகர பாண்டியன் என்பவன் கேரள, சோழ, ஹொய்சால மன்னர்களைப் போரில் முறியடித்து வென்று கொண்ட பொருள்களைக்
கொண்டு ஸ்வாமி கோயில் பெரிய பிராகார மதிலைக் கட்டுவித்தான்.

கோயிலின் நடுமத்தியில் அழகிய நந்தவனமும், வசந்த மண்டபமும் இருக்கின்றன. இளவேனிற் காலத்தில் நடைபெறும் வசந்த விழாச் சிறப்பாக இருக்கும். அடிக்கடி சமயப் பெரியோர்களின் பிரசங்கங்களும் நடைபெறும்.

## சூத முனிவர் குறிப்பு

இத்தலத்தின் மகிமையைக் குறித்து சூதமுனிவர் - நைமிசாரணியருக்கு எடுத்துரைத்துள்ளார். அந்த வரலாற்றின்படி - நான்கு வேதங்களும் ஈசனுக்கு தாங்கள தருவாய் நின்று நிரந்தர நிழலை அளித்து நித்தியமாய் இருக்கவேண்டும் என்று சிவபெருமானிடம் வரம் கேட்க, அவர் - "நான் நடனம் புரியும் 21 தலங்களில் மிகச் சிறந்த 'காஞ்சி' எனப்படும் நெல்லையில் வேணுவாய் அமருங்கள்; அங்கு யாம் லிங்க ரூபமாய் அமருவோம்" என்று பதில் உரைத்தாராம். எனவே, வேதங்கள் வேணுமரமாக, இறைவன் லிங்க ரூப நெல்லையப்பராய் திகழலுற்றார்.

டவுனுக்கு அடுத்த ஒரு சிறிய கிராமத்தில் அயோத்தி தசரத ராமன் மாயமானைக்கொன்ற பின், சீதையைத்தேடி வந்ததாகவும், அருகாமையில் உள்ள பொதிய மலையிலிருந்து அகத்திய முனியை அணுகி "ஐந்தெழுத்து" உபதேசம் பெற்று, நெல்லையப்பரை வழிபட்டு - "பாசுபதாஸ்திரம்" பெற்று, இலங்கை சென்று ராவணனை வென்றதாகவும் இவ்வரலாறு கூறுகின்றது. இந்தக் கிராமத்தை இன்று "மானூர்" என்று அழைக்கிறார்கள்.

## அன்னைக்கு பிராதான்யம்

ஸ்ரீராஜராஜேஸ்வரியாகிய அம்பாள் காந்திமதி அன்னைக்குத்தான் - மதுரையைப்போல, இங்கும் பிராதான்யம். அனேகமாக அம்பாள் கோயிலுக்குப் போய்விட்டுத்தான் ஈசனது ஆலயத்துக்குச் செல்வார்கள்.

இறைவன் பார்வதியை இமயத்தில் திருமணம் செய்கையில், பாரத்தால் வட பக்கம் தாழ்ந்து, தென்பால் உயர்ந்தது. பூமியைச் சமப்படுத்த விரும்பிய இறைவன் அகத்திய முனிவரைத் தென்பக்கம் பொதிய மலைக்கு அனுப்பினார். பூமி சமநிலை அடைகிறது. பரமேஸ்வரன் திருமணக்கோலத்துடன் அகத்தியருக்குத் தரிசனம் கொடுக்க முன் வருகிறார். இவ்வைபவத்தைக் குறித்து நெல்லைச் சீமையில் இரு ரசமான வரலாறுகள் நிலவி வருகின்றன.

பொதிய மலைக்குப் போகும் வழியில் ஈசனின் கண்களை அம்பிகை விளையாட்டாகப் பொத்துகிறாள்; சட்டென உலகெலாம் இருண்டு விடுகின்றது. எதிர்பாராத இந்த முடிவினால் ஏற்பட்ட பெரும் பழியை அகற்றும் பொருட்டு வடிவன்னை காந்திமதி, வேட்டைக்குச் செல்லும் பாதையிலுள்ள "கம்பா நதிக்கரை"யில் வந்து கடுந்தவம் புரிய, இறைவன் மனமிரங்கி அன்னையின் கரத்தைப் பிடித்து இழுத்துச் சென்று, திருக்கல்யாணக் கோலத்துடன் அகத்தியருக்குக் காட்சி அளிக்கிறார். இந்த விளையாட்டை சித்தரிக்கும் திருக்கல்யாணத் திருவிழா கண்கொள்ளாக் காட்சியாகும்.

## அம்பாளின் "கோபம்"

திருக்கல்யாண வைபவத்தைக் குறித்து, இப்பிராந்தியத்தில் இன்னொரு கதையும் சொல்லப்பட்டு வருகிறது. திடீரென அன்னைக்கு, இறைவன் மீது கோபம் ஏற்பட்டு பிறந்த வீடு போகிறாள். தனிமையைப் பொறுக்கமுடியவில்லை ஈசனால்! அன்னையை நாடி விரைகிறார். லோகமாதாவோ விளையாட்டாகப் பிகு செய்து கொள்கிறார். பாமர மக்களுக்குத் தங்களது லீலா விநோதங்களைத் தோற்றுவித்து, களிக்கச்செய்ய வேண்டாமா?

வேணுவன நாதர் அங்குமிங்கும் பார்க்கிறார். வெட்

கத்துடன் கெஞ்சுகிறுர் அன்னையிடம். எத்தனை நேரம் தான் நாதரை வாட வைப்பது? மனம் இரங்கினார் அன்னை. அன்னையை "கை" கோத்துத் திரு மணக்கோலம் கொண்ட பின் அகத்தியருக்குத் தரிசனம் கொடுக்கிறுர். கல்யாணத் திரு விழாவிற்குப் பல்லாயிரக்கணக்கில் ஆண்டுதோறும் மக்கள் வருவர்.

அடியில் மணிச் சிலம்பும், தலையில் வயிர மணி ராக் கொடியும், முகத்தில் பொட்டு - மூக்குப்புல்லாக்கும், மார்பில் நவரத்ன மாலைகளும், அழகுடன் வலக்கை உயர்த்தி, இடக்கை தாழ்த்தி, தாமரைக் கிளியைக் கையிலேந்திக் காந்திமதி அன்னை அளிக்கும் தரிசனத்திற்கு ஈடேது.

ஆணிக் கனகத்தரும் பொருளே
யென தாவியுடல்
பேணிக்கருதும் பொருளெனு
மூன்றும் பிரபலமாய்க்
காணிக்கை யாகத்தந் தேனெனை
யாளக் கடனுனக்கு
மாணிக்கமே வளம் வாய் நெல்லைக்
காந்திமதியமையே!"
-காந்திமதியம்மன் பதிகம்.

என்று நம்மையும் அறியாமல் துதிப்போமே! மாதந்தோறும் திருவிழாக்கள் நடந்தபோதிலும், பிரம்மோற்சவம் ஆனி மாதத்தில்தான்! கண்கொண்டு பார்க்க இயலுமா என்று மெய்மறந்து நிற்பர். தெய்வத் தம்பதிகளின் வீதி சுற்றுலாவின் போது தங்கச் சப்பரத்தில் "கங்காள நாதராகக்" காட்சி அளிக்கும் தோற்றமானது ஈடு இணையில்லாதது.

### ஊஞ்சல் மண்டபம்

அம்மன் கோயில் முகப்பு அம்பலத்தருகில் நிறுவப்பட்டுள்ளது 96 கால்கள் கொண்ட ஊஞ்சல் மண்டபம். இது தத்துவங்கள் 96 என்பதை நன்கு விளக்கிக் காட்டுவதற்குப் போலும்!

இதற்கு வடபுரம் உள்ள பொற்ருமரைப் புண்ணிய தீர்த்தம் சிவபெருமானே நீர் வடிவமானவரென்றும், பிரம்மன் பொன் மலரோடு இங்கு வந்து தொழுதனன் என்றும், அதனால் இது "பொற்ருமரை"யென்று அழைக்கப்படுகிறது.

திருக்கல்யாண மண்டபம் அல்லது ஆயிரக்கால் மண்டபம் 520 அடி நீளம், 63 அடி அகலம் உள்ளது. இங்கு ஐப்பசியில் திருமணவிழாவும், பங்குனி உத்திரச் செங்கோல் விழாவும் நடைபெறும்.

### இசையளிக்கும் தூண்கள்

சங்கிலி மண்டபம் வழியாக வந்து தட்சிணுமூர்த்தியைப் பார்ப்பார்கள். பின்பு பிரம் மாண்ட பிராகர்ரங்கள் வாயிலாக, பிரதட்சணமாக வந்து ஆறுமுகநயினாரையும், தாமிர சபை நடராஜ மூர்த்தியையும் தரிசித்து விட்டு, நெல்லையப்பர் பிரதான கோயிலுக்குள் நுழைவார்கள். பெரிய கொடிமரத்து அருகில் மகாநந்திகேஸ்வரரை இடையில் பார்க்காமல் போகமுடியாது.

கோயிலின் மணி மண்டப அமைப்புச் சிறப்பானது. ஒரே கல்லில் செதுக்கப்பட்ட, பல தூண்கள் வெவ்வேறு இசையைக் கொடுக்கும் இன்பம் தெய்வீகமானது. மார்கழி மாதத்தில் திருவாதிரை தினத்தில் தாமிர சபையில் நடைபெறும் ஈசனின் நடனக்காட்சி மிக அற்புதம். கோயிலின் தூண்களில் பொருத்தியுள்ள வீரபத்திரர் முதலிய விக்ரகங்கள் சிற்பியின் கைத்திறனைக் காட்டுகின்றன.

இங்கிருந்து மகாமண்டபம் வழியாகப்போய் வேணுவனநாதரை வழிபடலாம். மூங்கிலில் தோன்றி ராமக்கோனுக்கு முத்தியளித்தவர் இவரே! "வேண்ட வளர்ந்த மகாலிங்கம்" என்றும் அழைக்கப்படுவர்.

### நெல்லைக் கோவிந்தர்

சைவ - வைணவ பேதத்திற்கு இங்கு இடமே இல்லை. இருவரும் ஒன்று என்பதை உறுத்தும் வண்ணம் , சுவாமி கோயிலில் வேணுவனநாதலிங்கேசுவரருக்கு அருகில் நெல்லைக் கோவிந்தர் என்ற பெயருடன், திருமால் சேஷசயனக் கோலத்தில் காட்சியளிக்கும் சந்நிதி உள்ளது.

தெற்குப் பிராகாரத்தில், இராவணன் தாங்கி நிற்கும் திருக் கயிலாயக் காட்சியும், மேல்புறப் பிராகாரத்திலுள்ள தாம்பிர சபையும் பார்க்கவேண்டியவை. சைலப்பநாதர் சந்நிதியும் இருக்கிறது. முகம்மதியத் தலைவன் ஒருவன் தன் மனைவியின் நோய் நீங்கவேண்டி அது முற்றிலும் தீரப்பெற்றமையால் ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்வித்தான். அநவரதநாதர் என்றுஅதற்குப் பெயர். அன்வர் உஸேன்கான் பெயரிட்ட இறைவன் பின்னர் "அனவரத நாதன்" என்ருயிற்று என்பர். இங்குள்ள குழந்தைகளுக்கு "அனவரதநாதன்" என்று பெயர் சூட்டப்படுவதைக் காண்க!

### தீர்த்தங்கள்

இத்தலத்தில் 32 தீர்த்தங்கள் வரை உள்ளன. அவை

களில் ஒன்பது முக்கியமா னவை. பொற்றாமரை, கருமாரி, வயிரவ தீர்த்தம், சர்வதீர்த்தம் இவை கோயிலுக்குள்ளே உள் ளன. கம்பை, தெப்பக்குளம், சிந் துபூந்துறை, துர்க்கைதீர்த்தம், குறுக்குத்துறை இவை கோயி லுக்கு வெளியேயிருக்கின்றன. கோயிலின் ஸ்தல விருட்சம் மூங்கில்.

தாமிரபரணி ஆற்றின் நடு வில் "குறுக்குத்துறை" முருகன் கோயில்சிறப்புடையது. "கந் தமார் தழிபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை சிந்துபூந் துறை கமழ் திருநெல்வேலி" என்ற தேவாரப்பாடலை ஒட்டி ஆற்றங்கரையிலுள்ள ஊர்ப்ப குதி "சிந்துபூந்துறை" என்று இன்றும் வழங்கப்பெறுகிறது.

## கல்வெட்டுக்கள்

கோயிலில் மிகப் பழமை யான கல்வெட்டுக்கள் பல உள் ளன. கி.பி. 950-ல் இருந்த வீர பாண்டியன் காலத்தவை. முதல் இராஜந்திரன் (கி.பி. 1011-44), முதல் குலோத்துங்க சோழன் (கி.பி. 1074-1118), முதல் மாற வர்ம சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-35), இரண்டாம் மாறவர்ம சுந்தரபாண்டியன் (கி.பி. 1238-51), முதலாவது மாற வர்ம குலசேகரன் (கி.பி. 1268-1308), இரண்டாம் மாறவர்ம குல சேகர தேவன் (கி.பி. 1314-21) ஆகியோரின் கல்வெட்டுக் கள் காணப்படுகின்றன.

இவைகளில் பூஜை, நந்தவ னம், விளக்கு, வழிபாடு முதலி யவற்றிற்காக நிலம், பொருள் ஆகியவற்றை வழங்கியிருப்ப தாகக் கூறப்பட்டிருக்கின்றன. திருநெல்வேலித் தலத்தைப் பற் றிய நூல்கள் பல உள்ளன.

## முடிவுரை

பழைமையும் பெருமையும் பொருந்திய இவ்வாலயம் திரு நெல்வேலிநாதர் காந்திமதி தெய்வத்தம்பதிகளை இப்படி வாழ்த்தி உய்யலாமே!

"பொன்கொண்ட மலர்
அயனும் நெடுமாலும் அமரர்
களும் புகழ்ந்து போன்ற,
மின்கொண்ட மருங்குமை
யாள், இடம்பயில நடம்புரியும்
விமல மேலான்
கொன்கொண்ட ஐங்கரனும்
ஆறுமுகனும் புடைசூழும்
கோமான் எம்மான்,
மன்கொண்ட நெல்வேலி
நாதன் இருபாதமலர் மனத்துள்
வைப்பாம்"



## திருத்தலப் பயணம் ஏன்?

பழகிப்போன இந்த உலகில் வழக்கமான ஒரேமாதிரியான தினசரி வாழ்க்கைமுறையில் அவ்வப்போது அலுப்பு ஏற்படுகிறது.

சக்தியிழந்த பேட்டரிகளுக்கு மீண்டும் சக்தி செலுத்துவது போல் (ரீ சார்ஜ் செய்வதுபோல்) திருத்தலப் பயணங்கள் மனதிற்குப் புதிய உற்சாகத்தையும் புத்துணர்ச்சியையும் கொடுக்கிறது.

கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பசுவின் உடல்முழுவதும் பால் சூட்சுமமாகப் பரவி இருந்தாலும் அதன்மடியின் மூலமாகத் தானே பாலைப் பெறுகிறோம். அதுபோல் கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் புண்ணிய ஸ்தலங்களில் அவர் தம்மை அதிகம் வெளிப்படுத்துகிறார்.

நாடு முழுவதும் நூற்றுக்கணக்கான யாத்திரை ஸ்தலங்கள் இருக்கின்றன. அவை இயற்கையழகு மிகுந்த இடங்களான கடற்கரை, ஆற்றங்கரை, மலையடிவாரம், மலையுச்சி, பள்ளத்தாக்கு போன்ற இடங்களில் அமைந்துள்ளன.

இவற்றில் பல கோவில்கள் மகான்கள் முனிவர்கள் இதிகாச புராணங்களுடன் தொடர்பு கொண்டிருப்பதைப் பார்க்கலாம். இந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குக் கோடிக்கணக்கான பக்தர்கள், பல நூற்றாண்டுகளாக யாத்திரை சென்று கொண்டிருக்கிறார்கள்.

இந்த யாத்திரீகர்களின் புனிதமான சிந்தனைகளால் தெய்வீகமான எண்ணங்களால் இங்குள்ள கோயில்கள் தெய்வீக சக்தி பெற்று விளங்குகின்றன. அங்கு பக்தி சிரத்தையுடன் செல்லும் பக்தர்களின் உள்ளத்தை இந்த தெய்வீக அலைகள் தூண்டி விடுகின்றன; தெய்வீக நிலைக்கு உயர்த்துகின்றன. இந்தத் தெய்வீக சூழல் அங்குச் செல்லும் பக்தர்களின் பாவங்களை முற்றிலும் அழிக்காவிட்டாலும் அவற்றின் அளவைக் குறைக்கின்றன என்று நம்பப்படுகிறது. எனவே தான் புனித ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்ல வேண்டும் என்று பொதுவாக எல்லா மதங்களும் கூறுகின்றன.

-சுவாமி ஹர்ஷானந்தர்

அனுப்பியவர் : கமலா மாரியப்பன் - கோவை..



# மூன்றுக்கு உடையவர்

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

பொதுவாக, ஸ்ரீவைஷ்ணவ சமயத்தில் முதல் மூன்று ஆழ்வார்கள் என்றால், பொய், பேய், பூதம் என்று சொல்லுவார்கள்.

ஸ்ரீமத் பகவத் கீதையில் யாகம், யோகம், தியாகம் போன்ற மூன்றும் விபரமாக எடுத்துச் சொல்லப்பட்டுள்ளன.

இப்பிரபஞ்சம் பிரம்மம், ஆன்மா, மாயை என்ற முப்பொருளில் தோற்றமளிக்கிறது.

ஸ்ரீமந் நாராயணன், இப்பிரபஞ்சத்தை உண்டாக்கி, காத்து ரட்சித்து, இறுதியில் ஒடுக்கியும் விடுகிறார். எனவே முத்தொழிலுக்கும் உடையவர், ஸ்ரீமந் நாராயணன் என்றும் அறிய முடிகிறது

சிருஷ்டி ஆரம்பமாகும் போது, சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய முக்குணங்களும் தோன்றுகிறது.

இப்பிரபஞ்சத்தில் எது மிகச் சிறியதோ, பகுக்கமுடியாததோ, மற்றதுடன் சேராமல் தனித்து இருக்கிறதோ, இந்த மூன்றின் உன்னத நிலைக்குடையதை "பரமாணு" என்று சொல்லுகிறோம்.

(இரண்டு பரமாணு இணைந்தால் ஒரு அணு என்பது கணிதம்)

மூன்று அணுக்கள் சேர்ந்தால் ஒரு திரிஸ் ரேணுவாகும். மூன்று திரிஸ்ரேணு சேர்ந்தால் ஒரு த்ருடி ஆகும். (நூறு த்ருடி



ஒரு வேதம் என்று சொல்லுவதுண்டு.) மூன்று வேதங்கள் சேர்ந்தால் ஒரு லவம் ஆகும். மூன்று லவங்கள் சேர்ந்தால் ஒரு நிமிஷம் ஆகும். மூன்று நிமிஷங்கள் சேர்ந்தால் ஒரு கணம் ஆகும். இப்படியாக மூன்றின் பெருமையை சொல்லிக்கொண்டே போகலாம்.

ஸ்ரீமத் மகாபாரதம், வியாச பகவானால் அருளப்பட்டு, பின்பு சுகருக்கு போதிக்கப்பட்டு அவர்மூலம் பரீசித்து மன்னனுக்கு எடுத்துச்சொல்லப்பட்டு, இம்மூவரின் மூலமாக நமக்கு அனுபவிக்க வழிவகுத்ததாகப் பெரியோர்கள் சொல்லுவார்கள்.

ஸ்ரீராமானுஜர் மூன்றின் பெருமையை, தனது வாழ்க்கையோடு கலந்து காண்பிக்கும் அழகை "மூன்றுக்கு உடையவராக" ஏற்று அனுபவிப்போமாக.

1. யக்ஞோப வீதம், சிகை, திருமண் காப்பு ஆகிய மூன்றினையும் பெற்றுக்கொள்ளாதவன், சிறந்த செய்கைகளைச் செய்தாலும், எதிர்பார்க்கும் பலன் கிடைக்காது என்று எடுத்துக்காட்டுகிறார்.

2. ஆச்சார்யனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். ஸமாச்ரயணம் செய்து கொள்ள வேண்டும். திருமந்திர உபதேசத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும். ஆகிய இம்மூன்றும் உடையவர் காட்டிய அறநெறிகளாகும்.

3. பகவான் வாமனாவதாரம் எடுத்து, "மூன்றடி" நிலம் கேட்டுப் பெற்று அவதார புருஷனாக விளங்குகிறார்.

நம் ராமானுசன், அருளிச்செயல், ஸ்தோத்ரம், ரஹஸ்யக்ரந்தம் - என்ற மூன்றினை பகவானுடைய சுவையான செய்திகளாக நமக்கு உடையதாக்கினார்.

4. உடையவர் சகம் "939"ஆம் ஆண்டு. மூவிரண்டான திருநட்சத்திரத்தில், மூன்றுவது இராசி நிலையான மிதுனத்தில் திருவவதாரம் செய்தருளினார். அவரது ஜனன காலத்தில் - லக்ன முதல் ஏழு இராசிக்குள் "மூன்று" கிரஹங்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

(மூவிரண்டு நட்சத்திரம்

3x2=6 திருவாதிரை. செவ்வா சனி - கேது சஞ்சாரம்.)

5. பகவானை ராஜா என்றும், ஆழ்வார்களை ராஜமஹரிஷிகள் என்றும், அருளிச்செயல்களே ராஜபுத்திரர்கள் என்றும் மூன்று உன்னத நிலைகளை நமக்கு எடுத்துக்காட்டுகிறார்.

6. சாக்யம், சமணம், ஆகமம் போன்ற மூன்று சமயங்களின் சாகஸச் செயல்களை எடுத்துக்காட்டிய பகவான், உடையவருக்கு "திரி' தண்டத்தையும் காட்டினார் என்பது ஸ்ரீவைணவ சித்தாந்தமாகும்.

7. 'ஸ்ரீராமானுஜரான - உடையவரைத் தேடிப்போனால், அவர் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் சன்னதியில் இருப்பார். அங்கேயும் இல்லையென்றால், ஸ்ரீரங்கத்தில் - அரங்கனிடம் இருப்பார். அங்கேயும் இல்லையென்றால், திருப்பதி ஸ்ரீநிவாஸனிடம் இருப்பார். இந்த மூன்று தெய்வ கடாக்ஷங்களையும் உடையவர் என்பது நமது ஆன்றோர்கள் திருவாக்காகும்.

8. எந்த இடத்தில் ஸ்ரீவைணவர்கள் ஒன்று கூடி திரளாக வாழ்கிறார்களோ அந்த இடத்திலும், பக்தி பரிமளம் வீசும் இடத்திலும், ஸ்ரீபாஷ்யம் போன்ற க்ரந்த விசாரங்கள் நடக்கின்றனவோ அந்த இடத்திலும் ஸ்ரீராமானுஜன் இருந்து வருகிறார் என்ற மூன்று பகவத் சம்மதங்களை பாகவதர்கள் ஏற்றுக்கொண்டுள்ளார்கள்.

9. மதுராந்தகம்- வருளாரண்யக்ஷேத்ரம்-த்வயம் விளைந்த திருப்பதி - என்ற மூன்று திருப்பெயர்களைப் பெற்ற ஒரே திருத்தலத்தில்தான் ஸ்ரீராமானுஜன் காஷாயம், திரிதண்டம் இல்லாமல் க்ரஹஸ்தாச்ரம நிலையில் சேவை சாதித்து வருகிறார் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

10. கொட்டும் மழையை உபநிஷத் என்றும், அதனால் ஏற்பட்ட காட்டருவியை புராணங்கள் என்றும், அதனால் ஏற்பட்ட காட்டாறு ஆழ்வார்களின் பாசுரங்கள் என்றும் மூன்று பிரிவுகளை நமக்கு எடுத்துக் காட்டியவர் ஸ்ரீராமானுஜர்.

11. இந்து சமய மூத்தோர் மூவராக, ஸ்ரீசங்கரர் - ஸ்ரீராமானுஜர்- ஸ்ரீமத்வர் என்போர்களை நாம் வழிபட்டு வருகிறோம். இதில் நடுவராக இருப்பவர் நம் ராமானுஜர்.

12. நம்மாழ்வார் திருவடிகளில் அன்பு பூண்டு, தமது திருவடியை பணிந்தவர்களுக்கு சுகத்தை அளித்து, யதிகளுக்குத் தலைவராக "உடையவர்" ஸ்ரீராமானுஜர். இந்த மூன்றும் ஒன்றாகப் பெற்றவர் தான் உடையவர்.

13. திருக்கச்சி நம்பிகளை ஆச்சர்ரியனாகக் கொண்டு திருக்கோஷ்டியூர் நம்பிகளிடம் திருமந்திர உபதேசம் பெற்று திருக்குறுங்குடி நம்பிக்கு திருமந்திர உபதேசம் அருளி இம் மூன்று நம்பிகளுக்கு உடையவராக உயர்ந்தார்.

14.

ஸ்ரீராமானுஜ ஸமாரம்பாம்.
இராமானுஜ மத்யமாம்,
இராமானுஜ பர்யந்தாம்
வந்தே குரு பரம்பராம்

என்ற மூன்றுக்கும் உடையவர் ஸ்ரீராமானுஜர்.

15. 'கலியும் கெடும் கண்டு கொள்மின்', என்ற நம்மாழ்வார் பாசுரப்படி இப்பூவுலகில் தோன்றி, நம்மாழ்வார் - திருவாய்மொழி - ஆயிரத்தையும் உலகறியச்செய்து ஸ்ரீவைணவத்தை எல்லோருக்கும் உடமையாக்கிக்கொள்ள வழிவகுத்தவர் மூன்றுக்குடையவரான ஸ்ரீஇராமானுஜர்.

16. பரம வைதீக சித்தாந்தம் - வைணப் பெருஞ்சமயம் - எம்பெருமானார் தரிசனம் என்ற மூன்றும் ஸ்ரீராமானுஜர் காட்டிய ஒரே தத்துவம்தான்.

17. ஸ்ரீராமானுஜர் -தனக்கு மட்டும் உபதேசித்த திருமந்திர உபதேசத்தை - யாவரும் அறிய வேண்டும் என்று அதை வெளியிட்டு, ஜாதிமத வேறுபாடுகளை பாராட்டாமல் எல்லோரையும் ஒன்றுபடுத்தி, மேலக் கோட்டை என்ற திருநாராயணபுரத்தில், ஹரிஜனங்களை ஆலயப்பிரவேசம் செய்ய ஆதரவளித்து - மூன்று பெரும் புரட்சிகளை கடந்த ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன்பே செய்த உத்தமர் நம் உடையவர். (ஒன்பது நூற்றாண்டு என்பது மூன்றின் பெருக்கம் என்பதையும் அறிய அதிசயமாகவே தோன்றும்.)

18. ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பும் நோக்கத்துடன் தென் தேசத்தில் 74 சிம்மாசனாதிபதிகளை ஏற்படுத்தி 74 வட்டங்களாகப் பிரித்தார். ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை எல்லா வைணவத் திருக்கோயில்களிலும் ஒரே வழிபாட்டு முறையைக் கொண்டு வந்தார். சாமானியர்களும் வேதத்தை மிகவும் எளிய முறையில் கற்றுக்கொள்ளும் படி செய்தார். இந்த மூன்று நோக்கங்களும் உடையவருக்கே உரித்தானது.

19. ஆதிசேஷன் - விஷ்வக்சேனன் - பாஞ்ச சன்யம் என்ற மூன்று அவதாரங்களில் உடையவர் அவதரித்தார் என்பது வைணவ உலகம் அறிந்த உண்மை.

20. காஞ்சிபுரம் திருத்தலத்தில் - இல்லறத்தைத் துறந்து, துறவறம் பூண்ட சமயம் - "எதிராஜனாக", ஸ்ரீரங்கத்தில் - பெரியபெருமாள், தன் திருப்பொலிந்த சேவடியைப் பதித்து, "உபய விபூதிச் செல்வத்தையும் உமக்கும் உம் உடையாருக்கும் தந்தோம், இனி நம்முடைய திருக்கோயிலை திருத்திப் பணி கொள்வீர்" என்று திருவாய் மலர்ந்தருளி "உடையவராக"வும், திருக்கோஷ்டியூர் திருத்லத்தில் - திருக்கோஷ்டியூர் நம்பிகள் - திருவாய் மலர்ந்தருளிய திருமந்திர உபதேசத்தை உலகறியச் செய்த போது "எம்பெருமானார்" என்ற மூன்று சிறப்புப் பெயர்களைப் பெற்றவர் நம்முடையவரான ஸ்ரீராமனுஜர்.

21. 'தென்னரங்கச் செல்வன் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே' என்றபடியாக ஸ்ரீரங்கம் பெரிய கோவிலில் நாள்விழா - பட்சவிழா - மாதவிழா என்ற மூன்று வழிபாட்டு முறைகளை ஏற்படுத்தியவர்தான் மூன்றுக்குடையவரான ஸ்ரீபெரும்புதூரார்.

22. தாய் மாமனான திருமலை நம்பி, உடையவருக்கு "இளையாழ்வான்" என்றும், பிரம்ம சூத்திரத்தை ஸ்ரீபாஷ்யமாக விவரித்த போது "பாஷ்யக்காரர்" என்றும், திருமாலிருஞ்சோலை பெருமாளுக்கு நூறு தடா வெள்ளையும் அக்கார வடிசலும், செய்தளித்த போது அர்ச்சகர் மூலம் "கோயில் அண்ணு" என்றும் மூன்று திருப்பெயர்களைப் பெற்று உயர்ந்தவர்தான் மூன்றுக்குடையவர்.

23. பெரியநம்பி, யாதவப்பிரகாசர், திருக்கச்சி நம்பி போன்ற மூன்று உத்தமர்களிடம் நம்முடையவர் கல்வியைக் கற்று அறிந்தார்.

24. யமுனாச்சாரியாரின் (ஆளவந்தார்) எண்ணத்தை நிறைவேற்ற ஸ்ரீரங்கம் சென்று பலகிரந்தங்களைச் செய்தார். மைசூர் விட்டல தேவராஜவின் புத்திரிக்கு ஏற்பட்ட வியாதியைப் போக்கி - பிடித்திருத்திருந்த பேயையும் ஓட்டி, தேவராஜனுக்கு விஷ்ணுவர்தன் என்ற திருப்பெயரையும் இட்டார். யாதவகிரி என்ற மேலக்கோட்டையில் பன்னிரண்டு வருட காலம் தங்கியிருந்து அங்குப் பல புரட்சிகளையும் செய்தார். இந்த மூன்று நிலைகளும் உடையவரின் வாழ்நாளில் மறக்கமுடியாததாகும்.

25. ஸ்ரீவைஷ்ணவத்தை பரப்ப பலருடன் வாதம் செய்து வெற்றி கொண்டார்.

காஷ்மீர தேசத்தில் ஸ்ரீசாரதா பீடம் ஏறி பல பாஷ்யங்களை உண்டு பண்ணினார்.

டில்லி பாதுஷாவிடம் இருந்த செல்வப் பெருமாளைப் பெற்ருர்.

இந்த மூன்று செய்கைகளும் ஸ்ரீவைஷ்ண உலகம் என்றும் போற்றும்.

26. கண்ணன் தன்னை மார்கழி மாதமாகக் கொண்டான். ஆண்டாள் பகவானை அடைய மார்கழி மாதத்தையே தேர்ந்தெடுத்தாள்.

ஸ்ரீராமானுஜன் திருவத்யயன உத்ஸவமான பகல் பத்தையும் இராப்பத்தையும் ஏற்படுத்தி, மூவருக்கும் உடைய மாதமாகக் காண்பித்தவர் மூன்றுக்குடையவர்.

27. ஸ்ரீராமாவதார காலத்தில் - திரேதாயுகத்தில் ஆதிசேஷன் ஸ்ரீராமனின் தம்பியாக அவதரித்து, அண்ணனுக்கு புகழ் சேர்த்தார்.

ஸ்ரீராமாவதார காலத்தில் ஸ்ரீராமபிரானின் திவ்ய சரித்தை திருக்குமாரர்களான லவ - குசலவர்கள் - ராமாயண கானமாக செய்ததை ஸ்ரீராமனே செவியுற்று மகிழ்ந்தான்.

இக்கலியில், ஆதிசேஷனான ஸ்ரீலட்சுமணஸ்வாமி இளையாழ்வானாக திருவவதரித்து, புவிக்கு ஏற்றம் கொடுத்தார். திருவரங்கத்து அமுதனார் "இராமானுச நூற்றந்தாதியை" அருளிச்செய்தார். தம் பெருமையைக் கூறும் இப் "பிரபந்த காயத்ரி' 'யை தானாக காதால் கேட்டு மகிழ்ந்தார்.

இந்த மூன்றும் உடையவர் வரலாற்றில் மூன்றுக்குடையவராக ஏற்றம் கொள்ளப்பட்டது.

28. அருளிச்செயல்களைக் காப்பாற்றி நமக்கு உடைமையாக்கியவர் உடையவர்.

தமிழ் மறைகளாயிரத்தையும் கொடுத்த முதல்வன் சடகோபன்.

மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் நம் இராமாநுசன். இந்த மூன்றும் வாழித்திருநாமத்தில் இடம்பெற்ற பெருமைதான் என்னே!

29.
தானான திருமேனியாகவும்,
தான் உகந்த திருமேனியாகவும்,
தமர் உகந்த திருமேனியாகவும்
மூன்று திருமேனி நிலைகளில் இன்றும் திவ்ய சேவை சாதித்து அருளுபவர் நம் உடையவர்.

30. நம் உடையவரின் பெருமையை
நிலத்தினும் பெரியது,
கடலினும் ஆழ்ந்தது,
வானினும் விரிந்தது
என்ற மூன்று நிலைகளையும் எடுத்துத்துக்காட்டி விவரித்துள்ளார்கள்.

31. கண்ணனுக்குடையன நான்கு. அது வீடு - பொருள் - தருமம் - காமம்.

ஆனால் மூன்றுக்குடையவர் நமக்குக் காட்டியது அறம் பொருள்-,- வீடு மட்டிலுமே.

32. திருக்கச்சி நம்பிகள் நம் உடையவருக்காக தேவராஜப்பெருமானிடம் மூவிரண்டு (3x2=6) வார்த்தைகளைக் கூறி விளக்கம் பெற்றுத்தந்தார்.

இப்படியாக மூன்றின் பெருமையை தமக்கே உடைமையாக்கிக் கொண்டவர், மூன்றுக்கு உடையவரான நம் இராமானுஜரான - உடையவர் ஆவார்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



## தகுதியால் வரும் சிறப்பு

'அறிவுடையார் எலலாம் உடையார்' என்பது வள்ளுவம். அறிவுடையவர்கள் எங்கே இருந்தாலும் அவர்கள் தங்கி இருக்கக்கூடிய இடத்தைத் தேடிச் சென்று பயன்பெறுவார்கள் மற்றவர்கள். வீட்டிற்குள் இருப்பது பூனை. வெளியில் கட்டுத்தறியில் கட்டியிருப்பது யானை. வீட்டிற்குள் இருக்கின்ற காரணத்தால் பூனைக்குப் பெருமையும் வீட்டிற்கு வெளியில் இருப்பதால் யானைக்கு இழிவும் வருவதில்லை. அரசனுடைய சபையைக் காத்துக்கொண்டு அங்கேயே இருந்தால்தான் பெருமை வந்தடையும் என்று எண்ணிக்கொண்டு சான்றோர்கள் காத்துக் கிடக்கமாட்டார்கள். மேன்மை குணம் இல்லாத அறிவற்றவர்கள் அரசவையிலே எப்பொழுதும் காத்துக்கிடப்பவர்களாக இருந்தாலும் அவர்களுக்குப் பெருமை வந்தடையாது. இருக்கின்ற இடத்தால் மட்டும் ஒருவருக்குச் சிறப்பு வந்து சேராது. இருக்கின்றவரின் தகுதியால் இடத்திற்குப் பெருமை வந்து சேரும். இதைக் குமரகுருபரர் சுவாமிகள் பாடலால் அறியலாம்.

*வேத்தவை காவார் மிகன் மக்கள் வேறுசிலர்*
*காத்தது கொண்டாங்கு உவப்பெய்தார் - மாத்தகைய*
*அந்தப்புரத்தது பூஞை புறங்கடைய*
*கந்து கொள் பூட்கைக் களிறு.*

-குமரகுருபரர்.

அனுப்பியவர் : மு. கோமதி - புத்தூர்.

## நீயும் தூங்கு

குருநாதர் ஒருவர்க்கு இரண்டு சீடர்கள்.

இருவரும் இதயபூர்வமாகப் பழகி வந்தனர். நாட்கள் செல்லச்செல்ல ஒருவன்மேல் இன்னொருவனுக்குப் பொறாமை ஏற்பட்டது. குருவிடம் அவனைப் பற்றிய தகாத எண்ணத்தை உருவாக்கத் திட்டம் இட்டான். அடுத்தநாள் விடியற்காலையிலேயே எழுந்தான். அனைத்து கடமைகளையும் விரைவில் முடித்து குருநாதர் காலடிகளில் பணிந்தான்.

'குருநாதா! நான் வைகறையிலேயே எழுந்து, கடன்கள் முடித்து உங்களைக் காண வந்துவிட்டேன். அவனோ இன்னமும் உறங்கிக் கொண்டிருக்கிறான்' என்றான்.

'அப்படியா, அவனைப் போலே நீயும உறங்கிக்கொண்டிருக்கலாமே' என்றார் குருநாதர்.

பதிலைக்கேட்ட சீடன் பதைபதைத்தான்.

'ஆம்! இவ்வளவு சீக்கிரம் எழுந்து அடுத்தவனைப பற்றிக்குறை கூறுவதைவிட தூங்குவதேமேலானதல்லவா!' என்றார் குருநாதர்!

-கவிமாமணி மதிவண்ணன்



# "அமுதனார் போற்றும் தமிழ்த்தலைவன்"

டாக்டர் ஏ.வி. ரெங்காச்சாரியார் - ஆழ்வார்திருநகரி.

'பிரபன்னகாயத்ரி' என்று பாராட்டப்படும் இராமாநுச நூற்றந்தாதியில், திருவரங்கத் தமுதனார் தமது சிறந்த ஆசார்யரான ஸ்ரீஇராமாநுஜ ரின் புகழை வாய் மணக்கப் பாடி அனுபவிக்கிறார். இராமா நுஜருக்கு ஆழ்வார்களிடமுள்ள ஈடுபாட்டையும் சில பாசு ரங்களில் அமுதனார் தெற்றெ னப் புலப்படுத்துகிறார். தமிழ்ப் புலமை காரணமாகப் பேயாழ் வாரை, 'தமிழ்த் தலைவன்' என்று பாராட்டி மகிழ்கிறார் அமுதனார். அப்பாசுரத்தின் சிறப்பை அனுபவிப்போம்.

"மன்னிய பேரிருள் மாண்டபின்
கோவலுள் மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை
காட்டும் தமிழத்தலைவன்
பொன்னடி போற்றும் இராமாநுசற்-
கன்பு பூண்டவர்தாள்
சென்னியிற் சூடும் திருவுடையார்
என்றும் சீரியரே"
[இரா.நூ.பா.10]

அறியாமை என்ற பேரிருள் திருக்கோவலூர் இடைகழியில் பொய்கையாரும், பூதத்தாரும் ஏற்றிய தீப ஒளியால் பேர்ந்து ஒழிந்தது. தீப ஒளியின் காட் சியில் தாம் கண்டு மகிழ்ந்த அற்புதக்காட்சியை,

"திருக்கண்டேன் பொன்மேனி
கண்டேன் - திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்
-செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம்
கைக் கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று"

என்று பூரித்துப் பாடுவார் பேயாழ்வார். ஆம்! முத லாழ்வார்களான இவர்கள் பக் திக்குக் கட்டுப்பட்ட பகவான் திருமகள் கேள்வன், இவர்களை மகிழ்ந்து கடாக்ஷித்தான். இவர்களது தீந்தமிழ்ப் பாசுரங் களையும் செவிமடுத்து ஆனந் தமடைந்தான். மாமலராளுடன் கூடியதால் திருமால் இகழ்வு நோக்காது ஆவினை மேயக் கும் ஆயனாகக் காட்சி தருகி ரான். சுவாமி நம்மாழ்வாரும்,

"பூவினை மேவிய தேவி மணாளனைப்
புன்மை எள்காது
ஆவினை மேய்க்கும் வல்லாயனை"

என்று திருவிருத்தத்தில் பாடி மகிழ்வார். கண்டமை சொல் லும் என்னாது கண்டமை காட்டும் எனறு நேரில் கண்


பேயாழ்வார்

ணெதிரே காட்டுமாப்போலே பாடுவார். சிறந்த கவிதை, விஷயங்களைக் கண்ணெதி ரில் கொணர்ந்து நிறுத்தும் என்பர். இதனால் தமிழ்த்த லைவனது தமிழ் வண்டமிழாக அமைந்துள்ளதைக் குறிப்பிடுகி றார். 'வண்டமிழ் நூற்க நோற் றேன்' - என்பார் காரிமாறன். "வண்டமிழாவது பழையதாகச் செய்தவை இவர் பேச்சாலே இன்று செய்த செயல்போலே ஸ்பஷ்டமாக இருக்கை" என்பது இதற்கான ஈட்டு ஸ்ரீசூக்தி.

மாமலராளுடன் ஆயனாம் பரதத்துவத்தையும் காட்டு மாறு வண்டமிழிற் கவிபாடும் திறமை பெற்றுள்ளமை பற்றி, திருநாமம் குறிப்பிடாமல், மதிப் புத் தோன்றும்படி "தமிழ்த் தலைவன்" என்றார். தமிழ் இவர் இட்ட வழக்காக இருக்கு மாம். உலகமளந்த பொன்னடி யில் ஈடுபாடு சற்றுக் குறைந்து, தமிழ்த் தலைவன் பொன்ன டியால் அதிகமாக ஈடுபட்டுப் போற்றுகிறாராம் ஸ்ரீராமாநுஜர். ஏன்? மாமலராளொடு கூடி ஆயனாய் எளிமைப்பட்ட பரம் பொருளைக் காட்டித்தந்த பேருப காரம் அவ்வாறு போற்றும்படி செய்கிறது.

"மதுநின்ற தண்டுழாய் மார்பன்
பொது நின்ற பொன்னங்கழலே
தொழுமின்"

என்று பேயாழ்வார் உபதேசிக் கிறார். இப்படி உபதேசிக்கும் தமிழ்தலைவன் பொன்னடி களை இராமாநுசர் போற் றுகிறார். பொன்போல அனை

வராலும் விரும்பததக்கதாதலாலும், பொற்கிண்டியில் தண்ணீர் அனைவருக்கும் வேறுபாடின்றிப் பயன்படுவது போல, அனைவரும் காணும் வண்ணம் வண்டமிழால் காட்டி உபகரித்தலின் பேயாழ்வார் பொன்னடி போற்றத்தக்கது என்பார். பொற்கிண்டி போன்றவர் பேயாழ்வார், தண்ணீர் போன்றது மூன்றும் திருவந்தாதி என்பதை உன்னுக.

தமிழ்த் தலைவனான பேயாழ்வாரைப் போற்றும் ஸ்ரீஇராமாநுஜரிடம் கொண்ட அன்பு (ஆசார்யாபிமானம்) மூன்றும் திருவந்தாதியில் பேயாழ்வார் காட்டும் ஆயனைக் காணச்செய்து, பிரம்மதேஜஸ்ஸுடன் பொலிவுறச் செய்வதால் அணி என்று உருவகம் செய்யப்பட்டுள்ளது. பூண்டவர் என்பதால் அன்பு பூணும் அணி என்பது புலனாகும். தெய்வத்திடம் மட்டுமின்றி குருவிடமும் எவனுக்கு அளவில்லாத பக்தி உள்ளதோ அவனுக்குப்பொருள் பிரகாசிக்கும் என்பது சாஸ்திரம்.

தமிழ்த்தலைவனான பேயாழ்வாரின் பொன்னடி போற்றும் இராமாநுஜரிடம், ஆசார்ய அபிமானம் கொண்டவர்களின் திருவடிகளைச் சென்னியிற் சூடுகிறவர்கள் என்னாளும் சீரியர்கள் (உயர்ந்தவர்கள்) என்பார் அமுதனார்.

பரதனும், குலசேகராழ்வாரும் சென்னியிற் சூடிய அடியாகிற முடி, பகவானிடம் அவர்கட்குள்ள பாரதந்திரியச் செல்வத்தைப் புலப்படுத்தும். நீண்முடியாய் பகவத் கைங்கர்ய சாம்ராஜ்யம் அவர்கள் கைவசம் இருந்ததைக் காட்டும். அமுதனார் காட்டும் அவர்கள் சென்னியிற்சூடும் அடிமுடியோ, பகவானைக் காட்டித்தரும் ஆசாரயரான உடையவருடன் நில்லாது, அவரிடம் அன்பு பூண்டவரிடத்தும், அவர்க்குள்ள பாரதந்திரியச் செல்வத்தை விளக்கும். துளங்கு நீண்முடியாய், பாகவத கைங்கர்யத்தின் முடிவெல்லையாய், பரம புருஷார்த்தமான ஆசார்ய பக்த கைங்கர்ய ஸாம்ராஜ்யமே அவர்கள் கைவசம் இருப்பதைக் காட்டுகிறது.

“ஆசார்யபிமானமே உத்தாரகம்” என்பதை நினைவிற்கொண்டு வாழ முயற்சிப்போமாக. ✠

## அழிந்தது ஏன்?

நரகாசுரன், சிசுபாலன், புரோ சக்கரவர்த்தி, கார்த்தவீர்யாச்சுனன், தசரதன், துரியோதனன், பகாசூரன், அருணுக்ஷதன் இவர்கள் அழிந்தது ஏன்?

**நரகாசுரன்** : பொருளாசையும், மனைவி - மக்கள் மீது அதீத பாசமும் வைத்ததாக அழிவினைத் தேடிக்கொண்டவன். ஆசை - அதாவது காமம் அவனது அழிவிற்குக் காரணமாயிற்று.

**சிசுபாலன்** : தனக்கு நிகராக மற்றவன் ஒருவனும் சமநிலையில் நிலைபெற்று நின்று சுகானுபவங்களை அனுபவித்தலைப் பொறுக்காது செயல்பட்டதால் அழிவைத் தேடிக்கொண்டவன். அதாவது மாச்சரியம் அவன் கெடுதலுக்குக் காரணமாயிற்று.

**புரோ சக்கரவர்த்தி** : தன்னைவிடப் பிறர் அறச்செயல்களை அதிகம் செய்தது கண்டு பொறுக்காது, அவர்களிலும் மேலாக தன்னிலை மறந்து தர்மம் செய்ததால் அழிவினைத் தேடிக்கொண்டவன். டம்பம் அதாவது - வீண் பெருமை அவனது அழிவிற்குக் காரணமாயிற்று.

**கார்த்தவீரியார்ச்சுனன்** : செல்வச் செருக்கால் மற்றவர் எவரையும் துச்சமாக மதித்ததால் அழிவைத் தேடியவன் இந்தச் செருக்கையே மதம் என்கிறது சாஸ்திர நூல்கள்.

**தசரதன்** : மனைவி மீதும் - மக்கள் மீதும் செல்வங்களின் மீதும் அதீத பாசம் வைத்ததனால் அழிந்தவன். அவன் அழிவிற்குக் காரணம் மோகம்.

**துரியோதனன்** : பேராசை பெருநஷ்டம் என்பதை உணர்த்துவது, இவன் அழிவு - உறவினரை ஏமாற்றி அவர்கள் சொத்தையும் அபகரிக்க முயன்ற தவறு இவனுடையது. இதுதான் லோபம் என்பது.

**பகாசூரன்** : தனது அசுர பலத்தால் பிறருக்குக்கேடு விளைவித்து - அவர்களை அழித்த செயலால் ஒருநாள் அவனும் அழிந்தான். வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்பது நிதர்சனமாயிற்று. குரோதத்தால் அழிந்தவன் இவன்.

**அருணுக்ஷதன்** : தனக்கு நேர்ந்தது போன்ற துயரம் பிறருக்கு நேரிடவேண்டும் என்று எண்ணிச் செயல்பட்டதால், அழிவைத் தேடிக்கொண்டவன். இதனையே ஈர்ஷை என்கிறது வேதப் பிரமாணங்கள்.

தொகுப்பு : **இராஜலட்சுமி சாரநாதன் - சேலம்.**

# ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகன்

திரு. ராஜம் ரெங்கசாமி - சென்னை.



ஸ்ரீ பெரும்புதூர் தந்த வள்ளல் ராமாநுஜரால் வைணவ மதம் ஸ்தாபிக்கப்பட்டது. கருணைக்கடலான ராமாநுஜர் யாவரும் உய்யப்பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் மிக்க தயாபாத்ரமாக இருந்து திருமந்திரத்தை யாவருக்கும் உபதேசித்தார்.

ராமாநுஜ மதத்தை கடைப்பிடித்து, இன்று உலகில் வைணவம் தழைத்தோங்க செய்தது ஸ்வாமிநிகமாந்த மகா தேசிகன். காஞ்சிபுரத்தில் திருத்தண்கா என்ற இடத்தில் உள்ள அனந்தஸூரி என்பவருக்கும், தோதாத்ரி அம்மையாருக்கும் அவதரித்தவர் ஸ்வாமி தேசிகன்.

அனந்தஸூரியும், தோதாத்ரி அம்மையாரும் திருவேங்கடநாதனை ஸேவிக்கப்போன சமயத்தில் அன்று இரவு வேங்கடமுடையான் அனந்தஸூரி தம்பதிகள் கனவில் தோன்றி, ஒரு கண்டையைக் கொடுத்து மறைந்தார். மறுநாள் காலை ஸன்னதியில் கண்டை காணாமல் போக எல்லாரும் வியந்தனர். திருமலை ஜீயர் மூலமாக யாவருக்கும் பரமன் விஷயத்தை தெரிவித்தான். அனந்தஸூரியும் தோதாத்ரியம்மையாரும் வேங்கடநாதனை தரிசனம் பண்ணிவிட்டுத் திருத்தெண்கா திரும்பினார்கள். தோதாத்ரியம்மையாரும் கர்ப்பவதியாகி 1190-ல் விபவ வருடம் புரட்டாசி மாதம் ச்ரவண நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் திருவேங்கடமுடையான் அருளால் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். குழந்தைக்கு ஸ்ரீவேங்கடேசன் என்ற திருநாமத்தைச் சூட்டினார்கள். இன்று நாம் யாவரும் ஸ்வாமி நிகமாந்த மகாதேசிகன் என்று வணங்கி வருகிறோம். ஸ்வாமியை திருவேங்கடநாதனின் திருக்கண்டையின் அவதாரம் என்றும், சிலர் திருவேங்கடநாதனே சாட்சாத் அவதாரம் என்றும் சொல்லுகிறார்கள். ஒரு வருடம் ஆனதும் குழந்தையை அனந்த ஸூரிகள் பேரருளாளன் சந்நதிக்கு எடுத்துச் சென்றார். பேரருளாளன் குழந்தையை அநுக்ரஹம் செய்து "ராமாநுஜ சித்தாந்தத்தை வளர்த்து வருவாயாக" என்று கூறினார்.

கிடாம்பி அப்புள்ளார் என்பவர் ஸ்வாமிதேசிகனின் மாமா. ஸ்வாமிதேசிகனுக்கு ஸகல சாஸ்திரங்களை உபதேசித்து, தேசிகனின் அவதார விசேஷத்தை உணர்ந்தார். ஸ்வாமி தேசிகனின் பெற்றோர்கள் தேசிகனுக்குத் தக்க வயது வந்ததும் கனகவல்லி என்ற பெண்ணை மணம் செய்து வைத்தார்கள்.

அப்புள்ளார், ஸ்வாமியின் அவதார ப்ரயோஜனத்தை நன்கு உணர்ந்து கருட மந்திரத்தை ஸ்வாமிக்கு உபதேசம் செய்து திருவஹீந்திரபுரம் அழைத்துச்சென்றார். தெய்வ நாயக பெருமாள் விஷயமாக, ஸ்வாமி 'தெய்வநாயக பஞ்சாசத்' என்ற ஸ்தோத்திரத்தை அருளிச் செய்தார். கருடபகவானால் ஸ்வாமி ஹயக்ரீவ மந்தரம் உபதேசிக்கப்பெற்று ஹயக்ரீவஸ்தோத்திரத்தை அருளிச்செய்தார். ஸ்வாமியின் ஹயக்ரீவ ஸ்தோத்திரத்தை

சொல்லுபவர்களுக்கு வித்தை, வாக்கு வன்மை எல்லாம் உண்டாகும். ஸ்வாமி ப்ரிதிதினமும் ஆராதித்த மூர்த்தி ஹயக்ரீவர் ஆனபடியால் விஷ்ணு ஆலயங்களில் ஹயக்ரீவர் பிரதிஷ்டை இருந்தால் அங்கு அருகில் ஸ்வாமி தேசிகனையும் ப்ரதிஷ்டை செய்து இருப்பதைக் காணலாம்.

அதன்பிறகு திருவேங்கடநாதனை ஸேவிக்க ஸ்வாமி திருப்பதி சென்றார். ஸந்நதியின் அருகில் சென்றதுமே, ஸ்வாமியை திருவேங்கடமுடையான் மிகவும் உகந்து, தனது அபார கருணையினால் ஸ்வாமியைக் கொண்டு தயா சதகம் இயற்றும்படி அருளினார். ஸ்வாமியின் தயாசதகத்தை நன்கு படித்தால், அதில் பலபல ஸ்லோகங்களில் ப்ரபத்தியைப் பற்றி ஸ்வாமி பேசி இருப்பதைக் காணலாம். தயாசதகம் படிப்பவர்களுக்குத் திருவேங்கடமுடையான் அருள் இருக்கும் என்பது உறுதி. அத்துடன் மறுபிறவி இல்லாமல் மோக்ஷத்தை அடைவார்கள் என்பது உண்மை.

கலைகளில் வல்லமை பெற்ற ஸ்வாமி திருவஹிந்திபுரத்திலிருக்கும்பொழுது ஸதஸ்ஸில் வைத்து கவிதார்கிக சிம்மம் என்ற விருது பெற்றார். ஸ்வாமி விவாதத்தில் பலரையும் வென்றிருக்கிறார். பலர்பொறாமையினால் ஸ்வாமிக்கு தீங்கு இழைக்க நினைத்து தோற்றுப்போனர்கள்.

ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளி இருக்கும்பொழுது வழக்கம் போல் ஸித்தாந்த ப்ரவசனம் செய்து கொண்டிருந்தார். ப்ரவசனத்தை கேட்ட பல பெரியோர், ஸ்வாமியின் வாயிலாக திருவரங்கநாதனுக்கு ஸ்தோத்ர ரூபமாக உத்தம காவியம் செய்ய வேண்டுமென்று ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் பாதுகா ஸஹஸ்ரம் என்ற அதியற்புதமான ஸ்தோத்ரத்தை அருளினார். ரங்கநாதன் விஷய்மாக அபீதிஸ்தவம் இயற்றினார். ஸ்வாமி தசாவதார ஸ்தோத்திரம் இயற்றியதும் ரங்கநாதன் ஸந்நதியில்தான்.

ஸ்வாமி திருநாராயணபுரம் எழுந்தருளி இருந்த சமயத்தில் செல்வபிள்ளையும், ஸ்ரீபாஷ்யக்காரரையும் மங்களாசாஸனம் செய்து யதிராஜ ஸப்ததி என்ற ஸ்லோகத்தை அருளினார்.

எல்லா கலைகளிலும் ஸ்வாமி வல்லமை பெற்றவர் என்று அறிந்த ஒரு சிற்பி ஸ்வாமியின் வல்லமையை பரீட்சிக்க வந்து, சிற்பி தான் ஒரு பீடம் அமைக்க போவதாகவும், அதற்குச் சரியாக ஸ்வாமியின் திருமேனியைப்போல் விக்ரஹம் செய்யப்போவதாகவும் ஸ்வாமியிடம் கூறினார். சிற்பி ச்ரத்தையுடன் பீடத்தை செய்து ஸ்வாமியின் விக்ரஹத்தையும் அதில் பொருத்த முயன்றார். விக்ரஹம் சரிவர பொருந்தாமையால் தனது உளியால் அதை சரிபடுத்த முயன்றபொழுது, உடனே ஸ்வாமியின் திருமேனியில் உதரம் பெருகியது. இதைகண்ட சிற்பி வருந்தி, ஸ்வாமியின் சக்தியை உணர்ந்து, பீடத்தை சரிப்படுத்தி, விக்ரகத்தை அதில் அமைத்தான். சிற்பியின் கைவண்ணத்தின் சிறப்பைக் கண்ட ஸ்வாமி, அவனை ஆசிர்வதித்தார். ஸ்வாமி விக்ரஹத்தைத் தனது திருக்குமாரர் நயினாராசார்யரிடம் கொடுத்தார். நயினாராசார், அதை திருவஹீந்திரபுரத்தில் எழுந்தருளி இருக்கும் திருவடிவாரத்தில் ப்ரிதிஷ்டை செய்தது எப்பொழுதுமே ஸ்வாமி அர்ச்சா ரூபத்திலும் தெய்வநாயகனை ஸேவிப்பதாக நமது உள்ளத்தில் படுகின்றது.

ஸ்வாமி எல்லையற்ற கிரந்தங்களை அருளிச்செய்து முடிவில் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்ற மூன்றையும் விளக்கமாக மக்களுக்குத் தெரியப்படுத்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் என்ற க்ருந்தத்தையும் உலகமுய்ய அருளினார்.

எம்பெருமான் அருளால் பூர்ண ஆயுளை பெற்றவர் நம் ஸ்வாமி நிகமாந்தமஹா தேசிகன். அவர் வாழ்க்கையில் உலக மக்கள் உய்யப்பெற காட்டிய வழிகள் அனந்தம். அவர் இயற்றிய ஸ்தோத்ரங்கள், ரஹஸ்யம், காவ்யம், நாடகம், தமிழ் ப்ரபந்தம், வ்யாக்யாநம், வாதக்ரந்தம், ரக்ஷாக்ரந்தம், அநுஷ்டானக்ரந்தம் இன்னும் பலப்பல. இவை எல்லாம் படிப்பதற்கு மனுஷ்ய ஆயுள் போதாது.

முடிவில் ஸ்வாமி திருநாட்டிற்கு எழுந்தருளும் சமயத்தில் நித்ய ஆராதனைகளெல்லாம் முடித்து, ஸ்ரீராமாநுஜர், அப்புள்ளார் இவர்களுடைய பாதுகாதீர்த்தம் ஸ்வீகரித்துக் கொண்டு, பேரருளாளன் விக்ரஹத்தையும் திருவாழி திருச்சங்கையும் தம் குமாரரான நயினாராசார்யருக்கு அநுக்ரஹம் செய்து கொடுத்தார்.

ஆசார்ய பாதுகையை தமது திருமுடியில் தரித்துக்கொண்டு, நயினாராசாரியருடைய மடியில் தன்தலயை வைத்துக் கொண்டு அவதார காரணமான கண்டாரூபமாக மாறி அந்தர்த்யானமானார்.

ஸ்வாமியின் ப்ரவசநத்தையும், வாதசக்தியும், கணக்கில் அடங்காத ஸ்ரீஸூக்திகளையும் மனதில் ஒருமுறை தினம் நினைததாலே நம்முடைய பாபம்அற்றுப் போகும் என்பதில் சந்தேகமே இல்லை.



# திருவண்ணாமலை - நெருப்புத்தலம்

திரு. ச. முத்துச்சாமி - புத்தூர்.



## முன்னுரை :

"பெருக்காறு சடைக்கணிந்த
பெருமான் சேரும
பெருங்கோயில் எழுபதினோடெட்டும்
மற்றும்
கரக்கோயில் கடிபொழிற் சூழ்
ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய
கொகுடிக்கோயில்
இருக்கோதிமறையவர்கள்
வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில்
ஆலக்கோயில்
திருக்கோயில் சிவன் உறையும்
கோயில்"

என அப்பர் பெருமான் தமிழ நாட்டைச் சேர்ந்த கோயில் களைப் பாடிச்சென்றுள்ளார். தமிழ்நாட்டிலுள்ள முக்கிய சிவாலயங்களுள் ஒன்று திரு வண்ணமலை.

## தலச்சிறப்பு :

அண்ணமலைத்தலம் பஞ்ச பூதத் தலங்களுள் ஒன்று. இத்த லம் நெருப்புத்தலம் (தேயு). இத் தலம் நினைக்க முக்தி அளிப் பது. சிவபெருமான் வல் லாள மாமன்னனுக்குப் புத் திரராகத் தோன்றித் திருவருள் புரிந்த தலம். தேவர்கள் சிவபெருமானின் முடியையும், அடியையும் தேடிக்காண முடி யாமல் செருக்குற்றுத் தீர்ந்து திகைத்து நிற்கத் தாமே பரம் பொருள் என்று காட்ட ஜோதிப் பிழம்பாகக் காட்சி கொடுத்தத் தலம் இது. இதனை உணர்த்தும் வகையில் இப்போதும் கார்த் திகை மாதம் கிருத்திகையில் சிறப்புமிக்க தீப தரிசன விழா நடைபெறுகிறது. அத்தீப தரி சன விழாவை 'அண்ணமலை தீபம்' என்று வழங்குவர்.

## கோயில் :

இறைவன் அருணசலேசுவ ரர். அம்பிகை உண்ணமு லையம்மை. பார்வதி தேவியார் தவம் செய்து சிவபெருமானு டைய இடப்பாகம் பெற்றதலம் இது. கோயில் சுமார் 25 ஏக்கர் நிலப்பரப்பில் நான்கு பக்கங்களில் நான்கு கோபுரங் கள் கொண்டு விளங்குகின்றது. கோபுரங்கள் மலிந்தகோயில் அண்ணமலையார் கோயில் என் றும் புகழுடன் விளங்குவது. ஆறு பிரகாரங்கள் உள் ளன. ஒவ்வொரு பிரகா ரத்தையும் கடந்தவுடன் ஒவ் வொரு சிறிய கோபுரங்க ளும் உள்ளன. கோபுரங்களும், பிரகாரங்களும் அமைந்துள்ளது போலவே திருக்கல்யாண மண் டபம், பதினாறுகால் மண்ட பம், ஞானப்பால்மண்டபம், தீர்த் தவாரி மண்டபம், உருத்தி ராக்க மண்டபம், நந்தி மண்ட பம் எனப் பல மண்டபங்கள் உள்ளன. மலை எட்டுமைல் சுற்றளவு உள்ளது. 360 தீர்த் தங்கள் உள்ளன. பஞ்ச முக தரிசனம் சிறப்புடையது.

## விழாக்கள் :

முப்பெரும் விழாக்களாகிய கார்த்திகை திருவிழா, பங்குனித் திருவிழா, தைத்திருவிழா முத

லியன சிறப்பாக நடைபெறும். நான்காம் பிரகாரத்தில் பிரம்ம தீர்த்தத்துக்கு அருகில் கிளிக் கோபுரம் உள்ளது. அருணகிரி நாதர் கிளி உருவம் எடுத்து கந்தரனுபூதி பாடினார் என்பது வரலாறு.

"அடல் அருணைத் திருக்கோபுரத்தே
அந்த வாயிலுக்கு
வட அருகிற்சென்று கண்டு
கொண்டேன்"

என்று அவரே பாடிப்போற்று கின்றூர்.

தீர்த்தம் திக்பாலகர் தீர்த்தம். தலவிருட்சம் மகிழமரம்.

விளவார் கனபடநூறிய
கடல் வண்ணனும் வேதக்
கிளர் தாமரை மலர் மேலுறை
கேடில் புகழோனும்
அன்வாவணம் அழலாகிய
அண்ணுமலை அண்ணல்

என்பது தேவாரம்.

தேவாரம் அருளிய மூவ ரும், மாணிக்கவாசகரும் பாடிப் பரவிய தலம் இது.

## அப்பர்

"ஓதிமா மலர்கள் தூவி உமையவள்
பங்காமிக்க
சோதியே துளங்கும் எண்தோள்
சுடர் மழுப்படையினானே
ஆதியே அமரர கோவே அணியணு
மலையுளானே
நீதியால் நின்னை அல்லால்
நினையுமா நினைவிலேனே"
-4ம் திருமுறை

## சம்பந்தர்

"தேடிக்காணுர்......................
தேவர்பெருமானை
மூடிஓங்கிமுதுவேய் உகுத்தமுத்தம்
பலிகொண்டு
கூடிக்குறவர், மடவார் குவித்துக்
கொள்ளவம்மினென்று
ஆடிப்பாடி அளக்கும் சாரல்
அண்ணுமலையாரே"

"உண்ணுமுலை உமையாளொடும்
உடனாகிய வொருவன்
பெண்ணுகிய பெருமான் மலை
திருமாமணிதிகழ
மண்ணுர்ந்தன அருவித்திரள்
மழலை முழவதிரும்
அண்ணுமலை தொழுவார்வினை
வழுவாவண்ணம் அறுமே
-1ஆம் திருமுறை

## மாணிக்கவாசகர்

திருவாசகம் அருளிய மணிவா சகப்பெருமானும், "நான்முகனும் காணுமலை" என்றும், 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியானவன்' என்றும் தமது திருவெம்பாவையில் போற்றிப் பாடுகிறூர். திருவெம்பாவை என்னும் பாவை நூலாகிய இத் தெய்வீக நூலைப் பாடிய தலம் இது.

"அண்ணுமலையான் அடிக்கமலஞ்
சென்றிறைஞ்சும்
விண்ணேர் முடியின் மணித்தொகை
வீறற்றூர் போல்
கண்ணுர் இரவிகதிர்வந்து
கார்கரப்பத்
தண்ணுர் ஒளிமழுங்கித்
தாரகைகள் தாமகலப்
பெண்ணுகி ஆணுய் அலியாய்ப்
பிறங்கொளிசேர்
விண்ணுகி மண்ணுகி இத்தனையும்
வேறுகிக்
கண்ணுர் அமுதமுமாய் நின்றுன்
கழல்பாடிப்
பெண்ணே இப்பூம்புனல் பாய்ந்து
ஆடேலோர் எம்பாவாய்"
--திருவெம்பாவை.

## வள்ளலார்

வள்ளலார் இராமலிங்க சுவா மிகளும் தமது திருவருட்பாவில்

தேடுவார் தேடும் செல்வமே! சிவமே
திருஅருணுபுரித்தேவே!
ஏடுவார் இதழிக் கண்ணி எங்கோவே!
எந்தையே! எம்பெருமானே!
பாடுவார்க்கு அளிக்கும் பரம்பொருளே!
பாவியேன் பொய்யெலாம்
பொறுத்து
நாடுவார் புகழும் நின்திருக்கோயில்
நண்ணுமா எனக்கு இவண் அருளே!

என்று பாடுகிறூர்.

## முடிவு

அண்ணுமலைத்தலம் தமிழ் நாட்டின் பெருமைமிக்க தலமா கவும் முக்தி அளிக்கும் தலமா கவும் விளங்குகிறது.



## ஸர்வ தரிசனம்

திருமலைக் கோயிலில் ஸர்வதரிசனம், புதன், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளைத் தவிர நாளும் காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், இரவு 8 மணியிலிருந்து இரவு 10-30 மணி வரையிலும் அல்லது கூட்டத்தைப் பொறுதது 'ஸர்வ தரிசனத்'திற்காக பொதுமக்கள அனுமதிக்கப்படுவர். சாதாரண நாட்களின் போது ஸர்வதரிசனம் நாள் ஒன்றிற்கு 14-30 மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களின் போது நாள் ஒன்றிற்கு 18 முதல் 20 மணி நேரங்கள் வரை அனுமதிக்கப்படும்.

# திருமகள் திருவருள்

திரு. க. கருப்பையா - இராஜபாளையம்.



உலகில் பிறந்தது முதல் ஒருவன் சுகபோகங்களில் திளைத்துக்கொண்டிருக்கிறான். அவன் எத்தொழில் செய்தாலும் முன்னேற்றம் ஏற்படுகிறது. வளர்ச்சி உண்டாகிறது. மிகுந்த லாபமும், பேரும் புகழும் உண்டாகிறது. அவன் செய்கின்ற எச்செயலிலும் வெற்றியே ஏற்படுகிறது. எவ்வித கவலையும் இல்லாமல் மகிழ்ச்சி அடைகிறான்.

ஆனால் இதற்கு நேர்மாறாக ஒருவன் துன்பக்கடலில் தத்தளிக்கிறான். அவன் செய்கின்ற யாவுமே தீமையாகவே முடிகின்றன. அவன் எத்தொழிலையும் மிகத்திறமையாகச் செய்தாலும் முன்னேற்றம் ஏற்படுவதில்லை. வளர்ச்சியின்றி அதில் நஷ்டமே ஏற்படும். மகிழ்ச்சி சிறிதும் இல்லாமல் எல்லாம் கவலையாகவே இருக்கும். மொத்தத்தில் துன்பத்தின் வடிவமாகவே அவன் காட்சியளிக்கிறான்.

இவ்வாறு இருபெருமாற்றங்களுக்கு என்ன காரணம் இருக்கலாம் என்று ஆழ்ந்து சிந்திக்கும் போது அவர்களுடைய முன்வினைப்பயனை இப்பொழுது அனுபவிக்கிறார்கள் என்றுதான் எண்ணவேண்டியதிருக்கிறது. முன் ஜென்மத்தில் அவர்கள் செய்த நன்மையின் பலனை இப்பொழுது சுகபோகமாக அனுபவிக்கிறார்கள். அல்லது அவர்கள் செய்த தீவினையின் பலனை வட்டியும் முதலுமாகத் தீமையின் மூலமாக அடைகிறார்கள். நாம் தெரிந்தோ தெரியாமலோ செய்கின்ற செயல்களுக்குரிய பலன்களை இப்பிறவியிலோ அல்லது அடுத்தப் பிறவியிலோ அனுபவித்துத்தான் போக்கமு

# KARVETINAGAR
# SRI VENUGOPALASWAMI TEMPLE

### A SYMBOL OF VIBRANT FAITH

*Faith is the source of light*
*Faith is the all-pervading wisdom*
*So declare the sages and saints*

It is the abiding faith of the devout that made the Temple of Sri Venugopalaswami an edifice of everlasting glory.

The Deity - Sri Venugopalaswami - was the patron God of the Karvetinagar rulers whose immeasurable love for the Lord finds its eloquent expression in the hymns composed in a bygone epoch.

Towering above the dusky hills and the green valley below, the temple presents a spectacular view.

The exquisitely carved sculptures, intricately designed pillars and elaborately decorated mandapas are indeed a connoisseur's delight.

The graceful forms of Lord Venugoplaswami and His consorts - Sri Satyabhama and Sri Rukmini captivate our hearts. The Deity -known as bounteous *Kalpavriksha* - bestows His blessings on all those who pray to Him.

The celebrated poet Sarangapani who was the court-poet of the rajas of Karvetinagar, declares unequivocally that the easiest means for salvation in the Kaliyuga is the darsan of Sri Venugopalaswami. It is said Thyagaraja the renowned composer, attained bliss after worshipping Lord Venugopala.

The *darshan* of Sri Venugopalaswami is an exhilarating spiritual experience. The Lord, one of the most delightful manifestations of Sriman Narayana, is a veritable Kalpavriksha.

Karvetinagar is located on Puttur - Chittoor road, about 25 Kilometres away from Tirupati. The Temple is being kept open for worship from early hours of the morning to late hours of the night.

* * *



Malayappa Swamy, Tirumala

# TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
# DONATION SCHEME FOR ACCOMMODATION AT TIRUMALA



Tirumala, the abode of Lord Venkateswara, is the holy of holies visited by millions of Devotees round the year.

Primed to meet the needs of visiting pilgrims, T.T.Devasthanams have been constructing cottages and Guest Houses, at Tirumala under donation Scheme.

The following categories of accommodation are now available under the donation scheme.

- C & D portions first floor Seshadri Nagar Cottages and Anjanadri Nagar Cottages.
  Donation : Rs. 1,50,000/-
- C & D Portions 1st Floor Garudadri Nagar Cottages
  Donations : Rs. 2,25,000/-
- Saptagiri Block No. 4 & 5 (Kaveri & Alaknanda) furnished suites.
  Donation Rs. 1,50,000/-
- Sapthagiri Block No.3 (Thungabhadra Block) unfurnished tenament.
  Donation Rs. 40,000/-
- Small Dormitory halls in Varahaswamy Guest House.
  Donation : Rs. 3,00,000/-
- Big Dormitory Halls in Varahaswamy Guest House.
  Donation : Rs. 6,00,000/-
- Spl. Type Cottages at Surapuram Thota.
  Donation Rs. 5,00,000/-




The Donor may send an application, specifying the category of accommodation, to the Chief Accounts Officer, T.T.Devasthanams, K.T. Road, Tirupati- 517 507 along with a Demand Draft drawn in favour of the Executive Officer, T.T.Ds.

BENEFITS :

- The donor will be provided with free accommodation at the donated or any other cottage/ suite for 60 days a year.
- This privelege is however restricted to 15 years in the case of institutions and large companies.
- A plaque displaying the donors name and place will be erected on the donated cottage/suite.
- Preference will be given to the family members of the donor in allotment.
- We appeal to the devotees to donate generously to the scheme for providing accommodation to the devotees at affordable rates.

Further details regarding location and plinth area can be had from Executive Engineer V, T.T.Devasthanams, Tirumala.

Executive Officer,
T.T.Devasthanams.

டியும். நாம் செய்த புண்ணியங்களுக்கெல்லாம் இன்பமே விளையும். பாவங்களுக்கெல்லாம் துன்பமே ஏற்படும் என்பதைத் தணிகைப்புராணம் உறுதியாகக் கூறுகிறது.

"இன்பமே பயக்கும் புண்ணிய
மெல்லாம்
இழிதரு பாவங்க ளெல்லாம்
துன்பமே பயக்கும் புண்ணிய பாவம்
தொக்க தம்பயன் தாராது ஒழியா
கொன்படு வினைகள் ஒழியிரு
வினையும்
குலாவுறு புண்ணிய பாவ
வன்புறு பயனை அப்பயன் போல
வழங்குறுது ஒழிவகை இலையே!"

இவ்வாறு புண்ணிய பாவங்களுக்குரிய நல்வினை, தீவினைகளை அனுபவித்துத்தான் தீர்க்கவேண்டுமா? இதனைப் போக்குவதற்கு வேறு வழியே இல்லையா என்ற வினாக்களுக்கு விடைதர நம் முன்னோர்கள் முயன்றிருக்கிருர்கள். "முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை இன்மை புகுத்திவிடும்" என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். நம் முன்னோர்கள் முயல் - ஆமை கதையைக் கூறுவார்கள். முயல் ஆமையிடம் தோல்வியுற்றது என்பர். அதற்கு நேரடிப்பொருள் முயலாமையினால் முயற்சி செய்யாமையினால் தோல்வியுற்றது என்பதாகும்.

எனவே, ஆண்டவன் திருவருளைப் பெற முயற்சி செய்திருக்கிருர்கள். மனம், மொழி, மெய் ஆகியவற்றை ஒருமுகப்படுத்தித் தம்மை மறந்தநிலையில் இறைவனை வணங்கியிருக்கிருர்கள். ஆண்டவன் திருவருளால் தீமையைப்போக்கி நன்மையைப் பெற்றிருக்கிருர்கள்.

ஒரு சமயம் ஆதிசங்கரர் பிச்சைக்காக ஒரு இல்லத்தின் முன் நின்ருர். ஊழ்வினைப்பயனால் பலநாள் பட்டனியில் தவித்துக் கொண்டிருந்த அந்த இல்லத்தரசி அம்பிகையை வழிப்படுவதிலிருந்து தவறவில்லை. உள்ளம் உருக வழிபட்டுக்கொண்டிருந்த அந்த அம்மையாருக்கு ஆதிசங்கரர் வாசலில் வந்து நிற்பதைக் கண்டு அமுதுபடைக்க விரும்பினார். ஆனால் வீட்டில் ஒன்றும் இல்லாததை உணர்ந்து வருந்துகிருர். துறவிக்கு இல்லை என்று சொல்லக்கூடாது என்பதால் தன்னிடமிருந்த பல நாட்களுக்கு முற்பட்ட ஒரு நெல்லிக்கனியைக் கொண்டு வந்து பிச்சையிடடார். உருகிய உள்ளத்தோடு சோகமே வடிவான அந்த அம்மையாரின் குடும்ப வறுமை நிலையை எண்ணிப்பார்க்கிருர்.

முன் வினைப்பயனை அனுபவித்துக்கொண்டிருக்கும் அந்தக் குடும்பத்தின் வறுமையை அம்பிகையின் அருளால் போக்கத் திருவுள்ளம் கொண்டார். திருமகளைக் குறித்து "கனக தாரா" ஸ்தோத்திரம் செய்தார். சிவபெருமான், அபிஷேகப் பிரியர். திருமால் அலங்காரப்பிரியர். அம்பிகை ஸ்தோத்திரப்பிரியை. ஆதிசங்கரரின் ஸ்தோத்திரத்திற்கு இரங்கி திருமகள் தங்க நெல்லிக்கனிகளாக இல்லம் நிறையுமாறு அருள்பாலித்தாள். சிறிது நேரத்தில் வறுமை தீர்ந்து செல்வம் பெருகியது.

ஆதிசங்கரரின் கனகதாரா ஸ்தோத்திரத்தைக் கவியரசு கண்ணதாசன் 21 பொன் மழைப் பாடல்களாகப் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

"முப்புவி ஈன்ற தாயே!
மோகனச் சிரிப்பின் செல்வி!
மூவிரண் டொன்றாய் வந்த
பிரமத்தின் மொத்த மாக
அற்புதம் காட்டி நிற்கும்
அழகிய சிற்பச் சோதி
ஆனந்தத் தெய்வ மாதா
அரும்பெறல் அன்னை பேரில்
இப்பொழுது உரைத்த பாடல்
எவரெங்கு பாடினாலும்
இப்புவி உளநாள் மட்டும்
இன்பமும் அறிவும் சேரும்!
நற்பெரும் பேறும் கிட்டும்
நன்னிலை வளரும்; என்றும்
நாட்டுக்கே ஒருவராக
நாளவர் உயர்வார் உண்மை"

எனவே, திருமகளின் திருவருளை நாடி உள்ளம் உருகத் தம்மை மறந்து துதித்தால் அருள்புரிவாள் என்பதில் அணுவளவும் ஐயமில்லை. இது நம் ஆன்ருேர் கண்ட உண்மை.

திருமகளின் திருவடிகளே சரணம்!



## நிறங்களின் குணங்கள்

| | | |
|---|---|---|
| அன்பின நிறம் | - | ரோஜா இளஞ்சிவப்பு |
| கருணை | - | பச்சை |
| பக்தி | - | மஞ்சள் |
| கோபம் | - | முழுச்சிவப்பு |
| அச்சம் | - | கபிலம் |
| விரோதம் | - | நீலம் |
| உயர்ந்த ஞானம் | - | ஊதா |

திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

# ஆஞ்சநேயர் மகாவிஷ்ணுவின் அம்சமே!

திரு. வரதாச்சாரி நரசிம்ஹன் - சென்னை.

பரமாத்மாவான மகாவிஷ்ணுவிற்கு கைங்கர்யம் (சேவை) செய்வதற்கு அப்பேரருளானால் அருளப்பெற்றிருக்க வேண்டும். பகவானுக்கு 'சேஷி' என்று பெயர். அவனுக்கு சேவை செய்பவர்க்கு 'சேஷன்' என்று பெயர். ஆயிரம் தலைகளுடைய நாகசிரேஷ்டர் பெருமாளுக்கு முதன்முதலில் சேவை செய்ய அருளப்பெற்றதால் அவருக்கு, 'ஆதிசேஷன்' என்று பெயர்.







நினைத்துப்பார்க்க முடியாத வாயுவேகம், மனோ வேகமளவு பறந்து செல்லக்கூடிய உறுதியான இறக்கைகளையுடைய பட்சி ராஜனான கருடாழ்வார் பெருமாளுக்கு வாகனமாக இருந்து சேவை செய்கிறார். இவருக்குப் 'பெரிய திருவடி என்றும் திருநாமம் உண்டு. ஆதிசேஷனும் பெரிய திருவடியும் மகாவிஷ்ணுவின் ஒவ்வொரு அவதாரங்களின் போதும் அவருடன் இருந்து சேவை செய்கின்றனர்.

இவர்களையடுத்து, பகவானுக்கு இராமாவதாரத்தில் சேவை செய்வதற்காக ஆஞ்சநேயர் அருளப்பெற்றார். வாயுதேவனுக்கும், அஞ்சனாதேவிக்கும் பிறந்ததால், இவர் வாயுபுத்ரன், ஆஞ்சநேயன் என்று அழைக்கப்பெற்றார். இவருடைய மற்றைய திருநாமங்களாவன: சிறிய திருவடி, ஹனுமான், மாருதி என்பனவாம்.

விஷ்ணுவின் அவதாரங்களுள், 'இராமாவதாரம்' ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது. இராவணன் பிரும்மாவைக் குறித்து தவமிருந்து, சாகாவரம் வேண்டினான். அதற்கு, பிரம்மா, அவ்வரத்தைக் கொடுக்க தன்னால் இயலாது என்று கூறி, அவனிடம், "உனக்கு எவரெவர் மூலம் மரணம் நேரக்கூடாது என்று கேள் நான் தருகிறேன்" என்றார். அதற்கு இராவணன், நரனை (மனிதனை) சிறுமையாக நினைத்து, அவனை விடுத்து, மற்றவர்கள் மூலம் தனக்கு மரணம் நிகழக்கூடாது என வேண்டி வரம்பெற்றான். இவ்வரத்தால் கர்வம் அடைந்த இராவணனின் அதர்ம காரியங்கள் விண்ணுலகிலும், மண்ணுலகிலும் அதிகரித்தன. இ னால் விண்ணவரும், மண்ண வரும் அடங்காத் துயரத்தில் ஆழ்ந்தனர்.

எங்கும் தர்மத்தை நிலை நாட்ட, பிரும்மா அளித்த வரப பொய்யாகாமல், இராவணனை சம்ஹாரம் செய்ய, மகாவிஷ்ணு திருவுள்ளம் கொண்டார். ஆகை யால் விஷ்ணு, தனது தெய்வ சக்தியை அடக்கி, மனித சக்தி யோடு மட்டும் இராமனாக அவ தரித்தார். இராமனாக அவத ரித்த விஷ்ணுவின் பணி நிறை வேறும் பொருட்டு, அவருடன் தெய்வாம்சத்தோடு ஆஞ்சநே யர் இணைந்தார்.

பிரம்மச்சரிய விரதம் பூண்ட ஆஞ்சநேயர், தன்னுடைய தெய்வசக்தியை, எத்தகைய அதர்மச் செயல்களிலும் செலுத்தாமல் காத்துவந்தார். மகாவிஷ்ணுவின் அம்சம், ஆஞ்சநேயரிடம் இருந்தது என்பதற்குப் பல உதாரணங்களை நாம் இதிகாஸங்களின் வாயிலாகக் காணலாம்.

பரமாத்மாவான விஷ்ணு என்றும் நிலையானவர். பிறப்பு, இறப்பு என்ற எல்லையைக்கடந்தவர். ஆஞ்சநேயரும் என்றும் 'சிரஞ்சீவியாக' அழிவில்லாமல் இருக்க, பிரம்மாவால் வரம் அருளப்பெற்றவர். திரேதாயுகத்தில் தோன்றி, 'இராமர் சேவை' செய்து, பின்பு துவாபரயுகம் முடிவு வரையில் இராமஜபம் ஜபித்துகொண்டு, ருக்மிணி சமேத கிருஷ்ணனை, 'சீதாராமனாக'க் கண்டு தரிசித்தார். கலியுகத்தில் ஆஞ்சநேயர், எங்கெங்கெல்லாம் சீதாராம நாமம் ஒலிக்கப்படுகின்றதோ, அங்கங்கெல்லாம் அவர் அந்த இராம நாமத்திலும், ஜபத்திலும் இருக்கிறார்.

விஷ்ணு, தனது பஞ்சாயுதங்களான, சக்ரம் பரதனாகவும், சங்கு சத்ருக்னாகவும் அவருடன் இராமாவதாரத்தில் அவதரிக்க, கோதண்டம் என்ற வில்லோடும், சனந்தகி என்ற கத்தியோடும் இராமராக காட்சி தந்தார். அவரது ஐந்தாவது ஆயுதமான 'கதி' என்ற கதாயுதத்தை ஆஞ்யநேயர் தாங்கி நின்றார்.

விஷ்ணு வாமனவதாரத்தில், விண்ணையும், மண்ணையும் விஸ்வரூபம் எடுத்து, ஈரடியில் அளந்து, மூன்றுவது அடியை மகாபலியின் தலை மீது வைத்து, பாதாளத்தில் தள்ளினார். கிருஷ்ணவதாரத்திலும் தானே பரமாத்மா என்பதை நிரூபிப்பதற்காக, கௌரவர் சபையிலும் , குருக்ஷேத்திர போர்க்களத்திலும், தனது விஸ்வரூபத்தைக் காட்டினார். அதேபோல் ஆஞ்சநேயர், 'மகாசமுத்திரத்தைத் தாண்டி, இலங்கைக்குச் செல்வதற்காகவும் தான் இராமனால அனுப்பப்பட்டவன் என்பதை சீதைக்கு உணர்த்துவதற்காகவும் விஸ்வரூபம் எடுத்தார். இவ்விருவரும் விஸ்வரூபம் எடுத்த பொழுது, தீயவர்கள் நடுங்கினர். பக்தர்கள் சரணகதியடைந்து, அக்கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு களிப்பெய்தினர்.

விஷ்ணு, கிருஷ்ணவதாரத்தில், 'கோவர்த்தனகிரி' என்ற பெரிய மலையைத் தனது சுண்டு விரலால் குடையாய்த் தூக்கிப்பிடித்து, கோபாலர்களை, இந்திரனின் கோபத்தினால் ஏற்பட்ட அடைமழையினின்றும் காத்தார். ஆஞ்சநேயர், 'சஞ்சீவி' என்ற மலையை ஒரு கணப்பொழுதில் பெயர்த்தெடுத்து இலங்கைக்குத் தாங்கிச் சென்று, அங்குப் போரில் அடிபட்டு மயங்கிய இலக்குமணன் மற்றும் வானரங்களை உயிர்பெற்று எழச் செய்தார். இருவரும் தன்னைச் சார்ந்தவர்களின் துயர் துடைக்க யாவும் செய்தனர். இந்திரஜித்தினால் எய்யப்பட்ட நாகபாஷாணத்தால் கட்டுண்ட இராம இலக்குவர்களை ஒரு நொடிப்பொழுதில் ஆஞ்சநேயர் தேவலோகம் தாவிச்சென்று, கருடாழ்வாரை அழைத்து வந்து, இராம லட்சுமணர்களை விடுவித்தார். இச்செயல்கள் விஷ்ணுவிற்கு மட்டுமே எளிதாகக் கூடியது.

ஆதிசேஷனும், கருடாழ்வாரும் தாங்கள் விஷ்ணுவைத் தாங்குவதால் பெரும் . பலம் வாய்ந்தவர்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்ட பொழுது, பெருமாள், அவர்களை .கர்வ பங்கப்படுத்தி :உண்மை நிலையுணர்த்தினார். ஆனால் ஒரு முறைகூட, ஆஞ்சநேயர் இவ்வாறு நினைத்துக்கூடப்பார்த்ததில்லை. எல்லாமே, என்றும் 'சீதாராமன்' என்ற நிலையினின்று ஆஞ்யநேயர் நழுவியதில்லை. சாந்தம், பணிவு என்பது விஷ்ணுவின் சிறப்பம்சம். அது ஆஞ்சநேயரிடமும் இருந்தன.

பரமாத்மாவான விஷ்ணு தன் பக்தர்களுக்கு என்றும் சாந்த ஸ்வரூபி! அதுபோன்று ஆஞ்சநேயர், தன் பக்தர்களுக்கு என்றும் கூப்பிய கரத்துடன் கூடிய 'இராமபக்தனாக' சாந்தஸ்வரூபியாகக் காட்சியளிக்கிறார்.

விஷ்ணுவின் சிறந்த பக்தரான நாரதர், சிலசமயங்களில் தன்னைவிட விஷ்ணுவின் சிறந்தபக்தன் யாரும் கிடையாது என்று கர்வப்பட்டதுண்டு. அப்போது பரமாத்மா, கோபீகாஸ்திரீகளும், பூலோகத்தில் பல இன்னல்களுக்கிடையே வாழ்ந்துவரும் மக்களும் தன்னிடம், நாரதரைவிட எவ்வாறு சிறந்த பக்தர்களாக இருக்கிறார்கள் என்பதை நிரூபணப்படுத்தி நாரதரின் கர்வத்தை அழித்திருக்கிறார். ஆனால் இராமரின் சிறந்த பக்தரான, ஆஞ்சநேயர் என்றும் அவ்வாறு கர்வப்பட்டதே கிடையாது! மேலும் சீதா சமேத ராமனைத் தவிர வேறொரு தெய்வத்தை பரம்பொருளாக நினைத்தது கூடக் கிடையாது.

பஞ்ச பூதங்களான வாயு, வருணன், பூமி, அக்னி, ஆகாயம், யாவும் விஷ்ணுவிற்கு அடக்கம். ஆஞ்சநேயர் சீதையைத் தேடி இலங்கைக்குச் செல்ல மகா சமுத்திரத்தைக் கடக்க வேண்டியிருந்தது. அப்பொழுது விஸ்வரூபம் எடுத்து பூமியில் காலை நன்ருகப் பதித்து அழுத்தி, வானத்தில் எழும்பி, இலங்கையை நோக்கித் தாவினார்.

அப்பொழுது பூமி பிளவுப் படாமல் அவரை நன்ருகத்தாங்கிக்கொண்டது. வாயு, ஆஞ்சநேயர் வானத்தில் தாவிச்செல்லும் பொழுது அவருக்கு அசதி ஏற்படாமலிருக்க இதமாக காற்றை வீசினார். வருணனும், சமுத்திரம் கொந்தளித்து தடையேதும் செய்யாமல் பார்த்துக் கொண்டார். ஆஞ்சநேயரின் இந்த சீரியச் செயலைக் கண்டு தேவர்கள் யாவரும் வானவீதியில் கூடிப் பூரிப்படைந்து, ஆடிப்பாடி ஆஞ்சநேயர் மீது மலர்த்தூவி வணங்கினர்.

இலங்காபுரியில் இராவணனுடைய வீரர்கள் ஆஞ்சநேயரின் வாலில் தீயிட்டுக் கொளுத்திய பொழுதும் அக்னி அவரைச்சுடவில்லை. ஆகையால் பஞ்சபூதங்களும் ஆஞ்சநேயருக்கு இதமாகவே நடந்து கொண்டன. இச்சிறப்பை கம்பர், இராம காதையில் நான்கே வரிகளில் அழகாக எடுத்துக்காட்டியுள்ளார்.

"ஐந்திலே ஒன்று பெற்ருன்
ஐந்திலே ஒன்றைத் தாவி,
ஐந்திலே ஒன்(று) ஆருக
ஆருயிர்க்காக ஏகி
ஐந்திலே ஒன்று பெற்ற அணங்
கைக்கண்டு அயலார் ஊரில்
ஐந்திலே ஒன்றை வைத்தான்
அவன் எம்மை அளித்துக்
காப்பான்"

ஒரு காலக்கட்டத்தில் இராமருக்கும் ஆஞ்சநேயருக்குமே யுத்தம் வரும்பொழுது இராமர் கோதண்டத்தில் நாணை ஏற்றி, மாருதியை அம்பால் அடித்தப்பொழுது, அவர் கூப்பியக்கரத்துடன் இராம நாமத்தை ஜபிக்கத் தொடங்கிவிட்டார். ஆகையால் கோதண்டத்திலிருந்து விடுபட்ட அம்பு, ஆஞ்சநேயரை அண்டவேயில்லை. இதன்மூலம் தான் எந்நிலையிலும் 'இராம பக்தன்' என்பது மட்டுமின்றி, இராம மூர்த்தியைவிட, 'இராம நாமம்' சக்தி வாய்ந்தது என்பதை உலகுக்குக் காட்டினார். மேலும் 'இராமஜபம்' யாவரையும் எல்லா இன்னல்களின்றும் காப்பாற்றும் என்பதை உணர்த்தினார். ஆஞ்சநேயர், தன்னை அடிபணியும், தோத்திரம் செய்யும் பக்தர்கள், இராமனை சரணடைந்து, தோத்திரம் செய்வதாகவே எடுத்துக்கொண்டார்.

இம்மண்ணில் பக்திநெறியைப் பரப்பிய ஆச்சார்ய புருஷர்கள், மக்கள் தெய்வத்தின் அருளைப்பெறுதற்குத் தினமும் இராமாயணத்தைப் பாராயணம் செய்யச்சொன்னார்கள். அதற்கு இயலவில்லையென்ருல் இராமாயணத்தில் ஒருபகுதியான 'சுந்தர காண்ட'த்தை யாவது பாராயணம் செய்யச் சொன்னார்கள். அதுவும் முடியவில்லையென்ருல் ஆஞ்சநேயரின் 108 திருநாமங்களையாவது ஜபிக்கச் சொன்னார்கள். சுந்தரகாண்டம் முழுவதும் ஆஞ்சநேயரின் பிரதாபங்களைப் பற்றியது ஆகும்.

மேலே கூறப்பட்ட எடுத்துக் காட்டுகள், ஆஞ்சநேயர் மகா விஷ்ணுவின் அம்சம் என்பதைத் தெள்ளத்தெளிவாகப் புலப்படுத்துகின்றன.



## பகுத்து அறியும் பண்பு

நல் உணர்வு பகுத்தறிவு இரண்டும் பெற்றதன் பயன் இறை உணர்வைப் பெறுவது ஆகும். அறிவின் பயன் இறைவனை எண்ணுதலே ஆகும். பகுத்து உணர்ந்து கொள்ளும் ஆறுவது அறிவைப்' பெற்ற இந்த மானிட உயிர் ஆத்மாவைப் பற்றியும் உலகத்தைப் பற்றியும் இறைவனைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்புகின்றது. தக்கவை இவை, தகாதவை இவை என்று தம் பகுத்தறிவைக் கொண்டு சிந்தித்துப் பார்க்கவில்லை என்ருல் உயிரினங்களில் மிகவும் உயர்ந்து விளங்கும் மக்களும் விலங்குகளே ஆவார்கள். மனுநீதியை அறிந்து நடந்தால் விலங்குகளும் தேவர்களுக்குச் சமமாக சான்ருேரால் எண்ணப்படும்.

தக்க இன்ன தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவின் நெறி
புக்கவோர் அவ்விலங்கும் புத்தேளிரே.

-கம்பர்.

அனுப்பியவர் : மு. கோமதி - புத்தூர்.









# மரணமும் தரணமும்

திரு. லா. ஸ்ரீநிவாஸன் - புதுதில்லி.

நாம் உட்காரும்போது அவனும் நம்முடன் உட்காருகிறான், நாம் நிற்கும் போது அவனும் நம்முடன் நிற்கிறான், நாம் நடக்கும் போது அவனும் நம்முடன் நடக்கிறான், நாம் தூங்கும் போது அவனும் நம்முடன் தூங்குகிறான், நமது நிழல் போல் அவன் ஒரு பொழுதும் நம்மைவிட்டுப் பிரிவதில்லை. அவன் யார் தெரியுமா? அவன்தான் ம்ருத்யு.

## இறக்கும் தன்மை :

மனிதனுக்கு வடமொழியில் (மர்த்ய:) மரிக்கும் ஸ்வ்பாவமுடையவன் என்றே பெயர். பிறப்பு என்றால் அதிலேயே இறப்பு என்பதும் சொல்லாமலே அடங்கிக் கிடக்கிறது. கண்ணபிரான் கீதையில் (2-27) "ஜாதஸ்ய ஹி த்ருவோ மிருத்யுர் த்ருவம் ஜன்ம மிருதஸ்ய ச" என்று அருளியுள்ளான். பிறப்பு உள்ளவனுக்கு இறப்பு நிச்சயம் உண்டு. தவிர்க்கமுடியாதது. இறந்தவனும் பிறந்தே தீர்வான் என்றபடி.

## ஸம்ஸாரமே ம்ருத்யு :

இங்ஙனே பிறப்பும் இறப்பும் மாறி மாறி வருவதே ஸம்ஸாரம் எனப்படும். "ம்ருத்யு" என்ற பதத்தினால் ஸம்ஸாரத்தைக் குறிப்பதும், ஸம்ஸாரத்தை ஒரு கடலாக வர்ணிப்பதும் கவி மரபு.

தரணம் என்றால் தாண்டுவது அல்லது கடப்பது என்று பொருள். எனவே, "மரணமும் தரணமும்" என்பது ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைத் தாண்டுதல் எனப்பொருள்படும்.

ஸம்ஸார ஸாகர நிமக்ன மனந்ததீனம்
உத்தர்த்தும் அரஹஸி ஹரே
புருஷோத்தமோஸி

என்ற முகுந்தமாலை ச்லோகம் காண்க. ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி மிகவும் தீனமான நிலையிலுள்ள என்னை புருஷோத்தமனான நீர் கரையேற்றிவிட வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறபடி.

## என்று கொல்? :

திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் (36) இங்ஙனே அருள்கிறார்.

சென்றது காலம் திரை நரை

*மூப்பான இனி*
*என்றுகொல் சாவறியோம்*
*என் நெஞ்சே!*

பழுதே பலகாலும் போயின. வயதோ ஆகிவிட்டது. தோல் சுருங்கிக் கிழத்தனமும் நரை முடியும் வந்தாகிவிட்டது. எப்பொழுதும் ' நம்மைத் தொடர்ந்து வரும் ம்ருத்யுவினால் நமக்கு மரணம் எப்போதோ அறியோம். எந்த நிமிடமும் நேரலாம் என்றபடி. இங்ஙனே கூறி, மேலே செய்ய வேண்டியதை தம் நெஞ்சத்துக்கு உபதேசிக்கிருர்.

ஆக, மரணம் நிச்சயம் ஆனால் அது எப்போது என்பது ஒருவருக்கும் தெரிவதில்லை.

## ஆறிலும் சாவு நூறிலும் சாவு :

கிழத்தனத்துக்குப் பிற்குதான் மரணம் என்பதில்லை. தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருமாலையில் (3) அருளியது காண்மின்

*"வேதநூல் பிராயம்நூறு*
*மனிசர்தாம் புகுவரேலும்"*

'சதாயுயர்வை புருஷ. என்று வேதம் மனிதனின் ஆயுள் நூறு வயது என்பதாக ஓதுகிறது. இது ஆயுளின் எல்லையைக் குறிப்பதேயன்றி, அவ்வளவு ஆயுள் இருந்தவர் மிகவும் சிலரே. இதை "புகுவரேலும்" என்றதனால் ஆழ்வார் குறிக்கிருர். புகுவர் என்று கேள்விப்படுகிறோம் அவ்வளவே. புகுவதற்கு ஸம்பாவனை இல்லை என்றபடி. அந்த நூறு வயது என்பது அளவு கோல் என்ற ஏற்றம் மட்டும் கொண்டது. ப்ரஹ்மாதி தேவதைகளைப் போல நீண்ட ஆயுள் இல்லாதது பற்றி "மனிசர்" என்று குறிக்கிருர்.

புகுவரேலும் - முதலில் புகுவாரில்லை. கர்ப்பத்திலே முடிதல், பிறக்கும் போதே மரித்தல், பிறந்து சிலநாள்களிலே சாதல், பால்யத்திலே அழிந்து போதல், செருக்கித்திரியும் யௌவனத்திலே காலமாதல், நடுவயதில் ஒழிதல், கிழத்தனத்தில் மரணம் என்றபடி "என்று கொல்?" என்பதை நிர்ணயிக்க முடியாதபடி இருக்கிறது. இதையே,

*கர்பே விலீயதே பூயோ*
*ஜாயமானோஅஸ்தமேதிச,*
*ஜாதமாத்ரே ச மிரியதே*
*பாலபாவேஅதயௌவனே*
*மத்யம் வா வயஹ ப்ராப்தே*
*வார்த்தகே வா த்ருவோ ம்ருதி:*

என்ற வசனமும் தெரிவிக்கிறது.

## மின்னின் நிலையில் :

வாழ்வின் அநித்யத்தை நம்மாழ்வார் இங்ஙனே காட்டியருள்கிருர். (திருவாய்மொழி 1-2-2)

*மின்னின் நிலையில, மன்னு*
*யிராக்கைகள்,*
*என்னுமிடத்து, இறையுன்னு*
*மின்நீரே*

மின்னல் நாம் காணும் போதே ஒரே க்ஷணத்தில் தோன்றுவதும் மறைவதுமாயுள்ளது. அது நிலையற்றது என்பது வெகுத் தெளிவு. நமது சரீரமோவென்றால் மின்னலைக் காட்டிலும் அதிக நிலையற்றது. எங்ஙனேயெனில், மின்னல் உடனே மறையும் என்பதை நாம் அறியமுடிகிறது. இந்த சரீரமோவெனில், தான் வெகுநாள் இருக்கப்போவதாக நமக்கு எண்ணத்தை உண்டு பண்ணி, திடீரென்று எதிர்பார்க்காமல் விழுந்து விடுகிறது. எனவே மின்னலைக்காட்டிலும் நமது சரீரத்தினிடத்திலேயே அதிக அநித்யமுள்ளது என்ற நினைவை நாம் அவசியம் கொள்ள வேண்டும்.

## சரீரம் அநித்யம் :

ஒரு ஸம்ஸ்க்ருத வசனம் கீழ் வருமாறு உரைக்கிறது.

*அநித்யானிஹி சரீராணி*
*விபவோனைவ சாஸ்வத:*
*நித்யம் சன்னிஹிதோ ம்ருத்யு:*
*கர்த்தவ்யோ தர்மசங்ரஹ:*

சரீரங்கள் அழிந்து போகக்கூடியவை. தனதான்யம் முதலியவையும் நித்யமல்ல. வ்யாதி முதலியவற்றை உண்டு பண்ணி நம்மைக் கொல்லுவதற்கு யம தர்மராஜன் தினந்தோறும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறுன். ஆகையால், கிடைத்த அவகாசத்துக்குள ஆத்மா நற்கதியடைவதற்குக் கொஞ்சம் கொஞ்சமாக தர்மங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும் என்றபடி.

'இவரால் தான் உலகம் க்ஷேமம் அடையப்போகிறது' என்று நினைத்துக்கொண்டிருக்கும் போது திடீரென்று யமன் அவரை இழுத்துக்கொண்டு போய்விடுகிறுன். உள்ளூரில் மரணமா, அசலூரில் மரணமா, எதனாலே மரணம் என்று நிச்சயம் செய்ய முடியாமல் பண்ணி வைத்துப் பிராணனை கொண்டு போய்விடுகிறுன்.

*"எல்லையில் வாசல் குறுகச்*
*சென்றால்*
*எற்றி நமன்தமர் ப்ற்றும் போது*
*நில்லுமின் என்னும் உபாயமில்லை"*

என்று பெரியாழ்வார் (4-10-3) அருளியபடி யமனைத் தடுக்கும் உபாயத்தை ஒருவருமறிந்திலர். வீட்டுக்குள் ஒளிந்திருந்தால் அதிக மழையினால்

வீடு இடிந்துவிழும்படி பண்ணி உயிரைக் கொண்டு போய்வி டுகிறுன். எவ்வளவு பந்தோ பஸ்து செய்தாலும் விடுகி றதில்லை. நம்மோடு கூடவே அவன் ஸஞ்சரித்துக்கொண்டி ருக்கிறுன்.

## மாண்டார் மாண்டார்

ஸ்வாமி வேதாந்ததேசிகன் பர மபதஸோபாநத்தில் விவேக பர் வதத்தில்,

**தந்திரங்கள் அளவிலராய்த்**
**தனத்தால் மிக்க**
**தார்வேந்தர் தொழுவைய-**
**மாண்டார் மாண்டார**

என்று அருள்கிறுர். தந் திரம் என்று சொல்லப்படு கிற காலாள், குதிரை, தேர் யானை, முதலிய பரிஜனங்க ளினால் அளவில்லாதவர்களாய், ஐச்வர்யத்தினால் அதிகர்க ளாய், மாலை சூடினவர்களான அரசர்கள் ஸேவிக்கும்படி இந்த உலகத்தை ஆண்ட மநு, மாந்தாதா போன்ற சக்ரவர்த்தி களும் மாண்டே போனார்கள். இங்கு "ஆண்டார் மாண் டார்" என்றவிடத்தில் சந்தியி னால் "மாண்டார் மாண்டார்" என்று வரும்படி ஸ்வாமி தேசி கன் அமைத்திருப்பது நோக் கத்தக்கது. அதில் ஓர் சிறந்த கருத்து அடங்கியுள்ளது. அதா வது, அப்படி ஒரு குடைக்கீழ் உலகம் முழுவதையும் ஆண்ட வர்களைப் பற்றியும் பின் உள்ள வர்கள் "மாண்டார்" என்ற இவ் வளவே நினைக்கின்றே அன்றி அவர்கள் ஆண்ட பெருமை களை நினைப்பதில்லை என்ற படி. எவ்வளவு பெருமையிருந் தும் கடைசியில் முடிவு என்ன? என்றபடி.

## ஆண்டவரே மாண்டார்

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (6-2-5) இங்ஙனே அருள்கிறுர்.

**பாண்தேன் வண்டறையும்**
**குழலார் பல்லாண்டிசைப்ப**
**ஆண்டார் வையமெலாம் அரசாகி,**
**முன்னாண்டவரே**
**மாண்டார் என்று வந்தார் அந்தோ!**

இந்த ஆழ்வாரே மற்றேரிடத் தில் (பெரிய திருமொழி 3-8-10) அருளியபடியே,

**கண்டார் வணங்கக் களியானைமீதே**
**கடல்சூழுலகுக்கொருகாவலராய்**
**விண்தோய்நெடு வெண்குடை**
**நீழலின் கீழே விரிநீருலகாண்டு**

என்றுப்போலே, நில முழுவதும் ஆளும் வேந்தர்களைச் சுற்றி வண்டார்பூங்குழல் மாதர் பலர் இருந்து "இச்செல்வம் மாறுதே நிற்க வேண்டும்" என்று பல்லாண்டு பாடுவார்களாம். அப்படிப்பட்டவர்களும் ஆண்டு மாண்டவர்களுடைய கணக்கி லேயே பதிவு' பெற்றுள்ளனர் என்றபடி. 'ஆண்டார்' என்பவர் 'மாண்டார்' என்ற சொல்லுக்கு இலக்காகினர் அந்தோ! என்ற அழகு காண்க.

இங்கு ஒரு உதாரணம் கொடுப்பர். ஒரு கவி நெடு நாள் பரிச்ரமப்பட்டு ஓர் அர சன் மேல் கவிபாடி அவனிடம் அதைப் படித்துக்காட்டிப் பரிசு பெற வேண்டுமென்று சென்று கொண்டிருக்கும் போது, அந்த அரசன் திடீரென்று மாண்டான் என்று கேள்விப்பட்டுத் தனது சிரமம் யாவும் வீணுயிற்றே என்று வருந்தினான் என்பர்.

## எது ஆச்சரியம்?

உலகத்தில் எல்லாவற்றையும் விட ஆச்சர்யமானது எது? என்று தர்மராஜன் (யக்ஷன்) தர்ம புத்ரரை வினவ, அவரும்,

**அஹன்யஹனி பூதானி ப்ரவிஶந்தி**
**யமாலயம்**
**சேஷா: ஸ்தாவரமிச்சந்தி**
**கிமாஸ்ச்ர்யமத: பரம்**

என்று விடையிறுத்தார். தினந் தோறும் பல ப்ராணிகளும் மனி தர்களும் இறந்து கொண்டே யிருக்கின்றனர். இதைக்கண் டும் மிச்சமுள்ளவர்கள் தாங்கள் நிலையாக இருப்போம் என்று நினைக்கின்றனர். இதைவிட வியப்புக்குரியது எது? என்ற படி.

யக்ஷப்ரச்னத்தில் ஒவ்வொரு ச்லோகத்துக்கும் 44ஆம் பட் டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் அழகிய சிங்கர் விசே ஷமான அர்த்தங்கள் ஸாதிப் பதுண்டு. இந்த சுலோகத் துக்கு அவர் அருள்வதாவது: 'சேஷா:' - வாஹகர்கள் பிணத் தைச் சுமந்து செல்லுகிற வர்கள், 'ஸ்தாவர மிச்யந்தி' இவ்வாறு நிறையப்பேர் இறந் தால் நமக்கு நிறைப் பணம் கிடைக்கும், அதனால் நாம் நன்றுகப் பிழைக்கலாம் என்று நிலைத்திருப்பதை விரும்புகின் றனர். இவனும் இறப்பவன் தானே! 'இப்போதோ இன்னும் சிறிது காலம் கடந்தோ எப்பொ ழுது மரணம் ஸம்பவிக்குமோ' என்று நினைக்காமல் மற்றவர் களைக் கொண்டு போவோம் என்று நினைக்கிறுர்கள். இதை விட ஆச்சர்யமாக என்ன இருக் கக்கூடும் என்றபடி.

## பிடரியில் கை :

சரீரம் அநித்யம் என்று அறிந் தால் செய்ய வேண்டியது யாது என்றுல் 'க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுனா தர்மமா சரேத்' என்றனர் பெரியோர். தன் தலைமயிரைப் பற்றிக் கொண்டு கத்தியால் தலையை வெட்டயிருக்கும் கொடியவனி டமிருந்து ஒருவன் மிக

வும் வேகமாக புத்தி சாதுர்யத்தால் எப்படி தப்பித்துக்கொள்வானோ அவ்வாறு அவ்வளவு விரைவில் தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும் என்றபடி. ம்ருத்யு நமது கழுத்தில் கையை வைத்துக் கொண்டு தலைமயிரைப் பிடித்துக்கொண்டு நம்மைக் கொண்டு போக தயாராக இருப்பதாக நினைத்து, அப்போது புத்திசாதுர்யத்தால் செய்யவேண்டியதை அதிசீக்கிரமாக செய்து முடித்து விட வேண்டும் என்றபடி.

## அநித்யத்தில் நித்யத்வம்

நமன் நமது பிடரியைப் பிடித்துத் தன் உலகுக்கு உந்தித் தள்ள வந்துவிட்டது போலப் பயந்து பரபரப்புடன் சில நல்ல கார்யங்களைச் செய்து முடிக்கவும் வேண்டும். நாம் நெடுநாள் இங்கு வாழப் போகிறவர்கள் போல் சில சமயங்களில் நினைத்துச் சில நீண்ட கால நல்ல நற்கார்யங்களையும் செய்து முடிக்கவும் வேண்டும். கல்வி கற்றல், திரை கடல் ஓடியும் திரவியம் தேடுதல் முதலியவை அத்தகைய நெடுங்காலத்திய காரியங்கள். நாம் நமது அற்ப ஆயுளை மட்டும் நினைத்து வைராக்யம் கொண்டிருந்தால் கல்வியில் ஒரு துறையிலும் சிறிது பயிற்சியும் பெற முடியாது என்று பெரியோர்கள் உலக அநுபவத்தை ஒட்டிக் கருதினார்கள். அதையே முன் கொடுத்த ச்லோகத்தின் முற்பகுதி வருமாறு தெரிவிக்கிறது.

அஜராமரவத் ப்ராக்ஞோ வித்யா
மர்த்தம் ச ஸாதயேத்

கிழத்தனமும் சிறப்பும் நமக்குக் கிடையாது என்பதுபோல் நினைத்து புத்திசாலியானவன் வித்யையும் செல்வத்தையும் அடைய வேண்டும் என்றபடி.

## அவிவேகியின் செயல் :

விவேகமுள்ளவன் தனக்கு எந்த நேரத்திலும் மரணமேற்படக்கூடும் என்று அறிந்திருந்தாலும், சில கார்யங்களுக்குத் தன்னை நெடுநாள் வாழப்போகிறவனாகக் கருதிச் செயல்பட வேண்டும் என்று கூறினோம். ஆனால் உலகில் அவிவேகிகளுக்கு இந்த ஜ்ஞானம் கிடையாது. அஜ்ஞானத்தினால் தாங்கள் நிரந்தரமாக வாழப்போவதாக நினைக்கின்றனர். இதைக் கண்ணபிரான் கீதையில் (16-11) இங்ஙனே அருள்கிறார்.

சிந்தாமபரிமேயாம் ச
ப்ரலயாந்தாமுபாச்ரிதா:
காமோபபோகபரமா
ஏதாவதிதி நிஸ்சிதா:

இன்றோ நாளையோ சாகப் போகிறவர்கள் இதையறியாது ஏதேதோ மநோரதிக்கிறார்கள். இவர்கள் விருப்பங்களுக்கு எண்ணிக்கை கிடையாது. அவற்றைப் பெறுவதற்காகச் செய்யவேண்டிய செயல்களை இவர்கள் மஹாப்ரளயம் வரை இருந்தால்கூட செய்து முடிக்க முடியாது. மனைவி முதலியவர்களை அநுபவிப்பதுதான் பரம புருஷார்த்தம் என்று கருதுகிறவர்கள் இவர்கள். இதற்கு மேற்பட ஸ்வர்க்கம் (மோக்ஷம்) முதலியவை கிடையா என்னும் உறுதி கொண்டவர்கள் இவர்கள் என்றபடி.

## ஓட்டைச்சாலிலுள்ள தண்ணீர்

ஆயுள் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வருகிறது. ஓட்டைச்சாலிலுள்ள தண்ணீர் சிறிது சிறிதாக வெளிவந்து கடைசியில் முழுவதும் தீர்ந்து விடுவதுபோல நமது ஆயுளும் சிறிது சிறிதாகக் கழிந்து முடியப்போகிறது என்பதைப் பாமரர்கள் அறிவதில்லை என்பதைச் சக்ரவர்த்தித் திருமகனே ஸ்ரீமத் ராமாயணத்தில் அருள்கிறார்.

நந்தந்த்யுதித ஆதித்யே
நந்தந்த்யஸ்தமிதே ரவௌ
ஆத்மனோ நாவபுத்யந்தே
மநுஷ்யா ஜீவிதக்ஷயம்

மனிதர்கள் சூரியன் உதிக்கும் போது பணம் ஸம்பாதிக்கிற காலம் கிட்டிற்று என்று ஸந்தோஷப்படுகிறார்கள். ஸூர்யன் அஸ்தமிக்கும் போது இஷ்டப்படி விஷயங்களை அநுபவிக்கிற காலம் வந்தது என்று மகிழ்கின்றனர். ஓட்டைச்சாலிலுள்ள ஜலம் போல் தங்கள் ஆயுளின் நாசத்தை அறிகிறார்களில்லை என்றபடி.

## வாள்களாகிய நாள்கள்

இவ்விஷயத்தையே திருமழிசையாழ்வார் அருளும் அழகைக் காண்மின். (திருச்சந்த விருத்தம் 112):-

வாள்களாகி நாள்கள் செல்ல
நோய்மை குன்றி மூப்பெய்தி
மாளு நாளதாதலால் வணங்கி
வாழ்த்து என் நெஞ்சமே!

நாள்களோ கடுங்குதிரைகள் போல விரைந்தோடிக்கொண்டே இருக்கின்றன. ஆயுளை அறுக்கும் வாள்களோ இவை? என்னும்படியாக நாள்கள் பழுதே கழியாநிற்க, யௌவனப் பருவத்திலுண்டாகக்கூடிய ரோகங்களாலே உடல் குன்றிப் போய் இடிவிழுந்தாற்போல் திடீரென்று கிழத்தனமும் வந்து சேர்ந்து செத்துப் போகும் நாள் அணுகிவிட்டது. ஆயுஸ்ஸு

அஸ்திரமாகையாலும், உள்ள ஆயுஸ்ஸில் விக்னங்கள் பல முண்டாகையாலும், "நாளைக் குத் தொழுவோம்" என்றிராமல் இப்போதே எம்பெருமான் திரு வடிகளில் வணங்கி வாழ்த்தப் பாராய் நெஞ்சே! என்று தமது நெஞ்சுக்கு ஆழ்வார் உபதேசிக் கிறார்.

## ஆசைவாய்ச் சென்ற சிந்தையர்

மனிதன் தனது வாழ்நாளில் தனக்கு ஆசையுள்ள இடங்க ளில் நெஞ்சைப் பறிகொடுத்து 'என்னுடைய தாய், என்னுடைய தகப்பன், என்னுடைய புத்தி ரன், என்னுடைய நிலம், பரி மளம் வீசாநின்றுள்ள கூந்தலை யுடைய என் மனைவி' என்று சொல்லிக்கொண்டு அவர்கள் பக்கல் மோஹமடைந்து பழுதே பல பகலும் போக்குகின்ற னர். கடைசிக் காலத்திலே யும் அவர்கள் பேரையே கூறி அழைக்காமல், 'கேசவா' என் றும், 'புருஷோத்தமனே' என்றும் 'வராஹ ரூபியாய் அவதரித்த வனும் அழியாதவனுமான எம் பெருமானே' என்றும் சொல்லுப வர்கள் அடையக்கூடிய பெரு மைகளைப் பேசப்புக்கால் நம் மால் பேசித்தலைக்கட்டப்போ காது என்கிறார் பெரியாழ்வார். அந்தப் பாசுரம் இதோ.

ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி
அன்னை அத்தன் என்புத்திரர்பூமி
வாசவார் குழலாளென்றுமயங்கி
மாளுமெல்லைக்கண் வாய்திறவாதே
கேசவா! புருஷோத்தமா! என்றும்
கேழலாகிய கேடலி! என்றும்
பேசுவாரவர் எய்தும் பெருமை
பேசுவான் புகில்நம் பரமன்றே

'மரண காலத்திலும் தனக்கு என்ன நேரப்போகிறது என் பதை நினையாமல் மரிப்ப வன், நம் உறவினர்களை விட்டுப்போகிறேமே, இவர்களை யார் எப்படிக்காப்பாற்றுவார் கள்? என்றே நினைக்கிறான் அந்தோ!' என்று கூரத்தாழ் வான் ஒரு ச்லோகத்தில் அருள் கிறார்.

## மரண பயம்

அனேகமாக எல்லோரும் மர ணத்தை நினைத்து பயப்படு கின்றனர். ஏன்? இதன் கார ணத்தை இதிகாஸமுச்சயம் (7-38) இங்ஙனே உணர்த்துகிறது.

ப்ராயேணுக்ருத க்ருத்யத்வாத்
ம்ருத்யோர் ச்ருத்விஜதே ஜன:
க்ருத க்ருத்யாஹ ப்ரதீக்ஷயந்தே
ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்

செய்யவேண்டியதைச் செய்யா மையினாலேயே பெரும்பாலும் ஜனங்கள் மரணத்துக்கு அஞ்சு கிறார்கள். செய்த வேள்வியர் மரணத்தை ப்ரியமான விருந்தா ளியைப் போல ஸந்தோஷமாக எதிர்ப்பார்க்கிறார்கள் என்றபடி.

## மரணத்தின் தரணம் :

இதுவரை தர்மத்தை அனுஷ் டிக்க வேண்டுமென்றும் கடமை யைச் செய்ய வேண்டுமென் றும் ஏதோ பொதுவாக சொல் லப்பட்டதே தவிர, மரணத்தின் தரணத்துக்கு செய்யவேண்டி யது யாது என்று குறிப்பாக நிச்சயமாக ஒன்றும் கூறவில் லையே. என்ற கேள்வி எழும். இப்போது அது தெளிவாகத் தெரிவிக்கப்படுகிறது.

## யமனிடம் சிக்காமை :

ம்ருத்யு என்பதற்கு யமன் என்றும் ஸம்ஸாரம் என்றும் இரண்டு பொருள்கள் உரைத்து வந்துள்ளோம். மரணத்தின் தர ணமாவது (1) நரகமடையாமை, (2) ஸம்ஸாரத்தைத் தாண்டுதல் என்று இருவிதமாகக் கொள்ளத் தக்கது.

## நரகமடையாமை :

எம்பெருமானின் நாமஸங்கீர்த் தனம் முதலியவற்றால் நர கம் செல்லாமல் யமனிடமிருந்து தப்பலாம். இதை ஸ்வாமி தேசி கன் அபீதிஸ்தவத்தில் (7) அருளி யுள்ளார். 'நதஸ்ய யமவஸ்யதா நரக பாத பீதி: குத:' அப்படிப் பட்டவனுக்கு யமனிடம் அகப் படுவது என்பது இல்லை. நரகாநுபவம் கிடையாது என் பதைச் சொல்லவும் வேணுமா என்கிறார்.

"கிளரொளி இளமை கெடு வதன் முன்னம் வளரொளி மாயோன் மருவிய கோயில் திருமாலிருஞ்சோலை சென்று சேவிக்கவேண்டும்" என்று நம் மாழ்வாரும், "முற்ற மூத் துக்கோல் துணையாமுன்னடி நோக்கி வளைந்து, இற்ற கால் கள் போல் தள்ளி இங்குஏங்கி இளையாமுன் வதரி சென்று வணங்கவேண்டும்" என்று திரு மங்கை ஆழ்வாரும் உபதேசிக் கின்றனர். இவற்றின் பயனும் நரகத்தைத் தவிர்ப்பதே.

நரகம் கிடையாதே தவிர, புண்ய பாபங்களுக்குத் தகுந்த படி ஜன்மங்கள் உண்டு. ஆகை யால் இவற்றால் ஸம்ஸாரத்தைத் தாண்டிவிடமுடியாது என்பது இங்கு அறியத்தக்கது.

## ஸம்ஸாரத்தைக் கடத்தல் :

பிறப்பிறப்பாகிற சுழலைத் தாண்டுவதற்கு பக்தியோகம் அல்லது ப்ரபத்தி என்ற இரண்டே வழிகள்தான் உள்ளன. என்று சாஸ்திரங்கள் நிச்சயித் திருக்கின்றன. அவற்றுள் பக் தியோகத்தை உபாஸநம் என் றும் வித்யை என்றும் குறிப்ப துண்டு. உபநிஷத்துக்களில் 32 வித்யைகள் ஓதப்பட்டுள்ளன.

## அவித்யையும் வித்யையும் :

பக்தியோகத்தை ஈசாவாச் யோபநிஷத் இங்ஙனே நிர்ண யிக்கிறது.

வித்யாம் சாவித்யாம் ச யஸ்தத்
வேதோபயம் ஸஹ
அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா
வித்யயாம்ருதமஸ்னுதே

ய: - எவன்; ஆசார்யனிடம் வித்யையை உள்ளபடி க்ரஹித்த எவன்; வித்யாம்ச - உபாஸந மாகிற வித்யை என்ன; அவித் யாம் ச - ஸாத்விக த்யாகத்து டன் செய்யப்படும் வித்யையை விட வேறான, அவித்யை என் கிற கர்மா? என்ன; தத் - அந்த; உபயம் - இரண்டையும்; ஸஹ - ஒன்றொடொன்று கூடினதாக; வேத - அறிகிறனோ; ஸஹ - அந்தத் தெளிவைப் பெற்று அவ்விதமே செயல்படுகிறவன். அவித்யயா - பலனைக் கருதா மல் செய்யும் கர்மாவினால்; ம்ருத்யம் - உபாஸனத்தின் உத் பத்திக்கு விரோதியாக இருக்கும் ப்ராசீன கர்மங்களை; தீர்த்வா - கடந்து; வித்யயா - பரமாத்மோ பாஸனமாகிற வித்யையால்; அம்ருதம் - பகவானை, அஸ் னுதே - பெற்று அநுபவிக்கிறன் என்று இதன் பொருள்.

பக்தியுடன் செய்யப்படும் நிரந்தர த்யானம் இங்கு 'வித்யா' சப்தத்தால் குறிக் கப்படுகிறது. சாஸ்திரத்தைக் கொண்டு பகவானை உணர்வ தால் மட்டும் மோக்ஷம் கிட்டி விடாதே. அப்படிக் கிட்டுவதா னால் 'உபாஸனம் செய்' என்ற சாஸ்திரம் பொருளற்றதாகும்.

அவித்யை - வித்யை என் கிற உபாஸனத்தைவிட வேறு னதால், அத்துடன் நெருங் கிய தொடர்பு கொண்டிருக்கும் கர்மா நான் செய்கிறேன், செய் கிற கர்மா எனக்கு சேஷம், அதனால் கிட்டும் பலன் எனக்கு என்ற எண்ணமின்றிச் செய்யப் படும் வர்ணாச்சரம தர்மங்களே இங்கு 'அவித்யா' என்ற சொல் லால் குறிப்பிடப்படுகின்றன.

உபாஸனம் கர்மா இவற்றுக்கு பரஸ்பரம் எவ்வித விரோதமும் இல்லை. விரோதமில்லை என் பது மாத்திரமன்று. இரண்டும் சேர்ந்தே செயற்படக்கூடியவை. பலனில் விருப்பமின்றிச் செய் யும் கர்மாவினால் மாத்திரம் மோக்ஷம் கிடைத்து விடாது, உபாஸனத்தால்தான் மோக்ஷம் கிட்டும். நிஷ்காம கர்மா (பல னில் விருப்பமில்லாத கர்மா) இன்றி உபாஸனமே உதியாது. ஆகையால், கர்மாவை அங் கமாகக் கொண்ட உபாஸன ரூப அங்கியாலேயே மோக்ஷம் கிடைக்கும் என்ற தெளிவுடன் அவற்றை அநுஷ்டிக்க வேண் டும். கர்மா அங்கம், அப்ர தானம். உபாஸனம் அங்கி, ப்ரதானம். ஆகையால், இவற் றுக்குள் ஏற்றத்தாழ்வு இருந்தா லும், 'அவச்யம் செய்யப்பெற வேண்டியவை' என்ற அம்சத் தில் இரண்டு ஸமமே.

## ப்ரபத்தி இருவகை :

இக்காலத்தில் பக்தியோகம் செய்யத் தகுதியுள்ளவர்கள் அனேகமாக இல்லாததால், ப்ர பத்தி ஒன்றே உபாயமாகிறது. மேலும், பக்தியோகம் செய்பவர் களும் தங்கள் முயற்சியால் மட் டும் மோக்ஷமடைய முடியாது. பக்தியோகத்துக்கு அங்கமாக "எனது பக்தி யோகம் ஸபலமா கும்படிச் செய்தருள வேண்டும்" என்று எம்பெருமானிடம் ப்ர பத்தி அல்லது சரணாகதியைச் செய்தே பலனடைய முடியும். ஆக, ப்ரபத்தி தானே நேராக வும், பக்தியோகத்துக்கு அங்க மாகவும் இருந்து மோக்ஷத்தை அடைவிக்கிறது. இங்ஙனே ப்ரபத்தி இருவகைப்படுகிறது.

## உண்மையில் உபாயம் ஒன்றே :

ப்ரபத்தி இருவகை என்று கூறினபோதிலும், ப்ரபத்தி நேராகவோ அங்கமாகவோ உப கரிக்காவிடில் மோக்ஷம் கிடை யாது என்று தேறுவதால், உண்

---

தெரிந்து கொள்ளுங்கள் :

### நம்பிக்கைக்குரிய நிவேதனங்கள்

| | | |
|---|---|---|
| ஞாயிறு | - | சர்க்கரைப் பொங்கல் |
| திங்கள் | - | பால் சாதம் |
| செவ்வாய் | - | வெண்பொங்கல் |
| புதன் | - | கதம்ப சாதம் |
| வியாழன் | - | எலுமிச்சம்பழ அன்னம் |
| வெள்ளி | - | பால் பாயாசம் |
| சனி | - | புளியோதரை அல்லது தேங்காய், சாதம் |

- ஸ்ரீமத் தேவி பாகவதம்

திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

மையில்' ப்ரபத்தி என்ற ஒன்றே உபாயம் என்று முடிகிறது.

### ப்ரபத்தியின்றி மோக்ஷம் கிடையாமை :

ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அதிகாரி விபாகாதிகாரத்தின் முடிவில் இங்ஙனே அருளியுள்ளார்.

**ப்ரபலாதன்யேஷாம் ந**
**திஷதி முகுந்தோ நிஜபதம்**
**ப்ரபன்னஸ்ச வேதா ஸுசரிதா**
**பரிபாக்கபிதய**
**விலம்பேந ப்ராப்தி ப்ரஜன**
**சுகமேகஸ்ய விபுலம்**
**பரஸ்யாஸ்ஸு ப்ராப்தி: பரிமிதஸ்ச**
**ஜீவித தஸா**

மோக்ஷம் கொடுக்கும் எம்பெருமான் ப்ரபன்னர்களைத் தவிர மற்றவர்களுக்குத் தன் திருவடியை அல்லது தன் ஸ்தானமான பரமபதத்தைக் கொடுக்கிறதில்லை. ப்ரபன்னனும் புண்யங்களின் பரிபாகத்தின் வேறுபாட்டால் பக்தியோகம் செய்பவன், ப்ரபன்னன் (ப்ரபத்தி செய்பவன்) என்று இருவகை. அவர்களில் பக்தியோகம் செய்பவனுக்கு ப்ரஹ்மானந்தமென்ற முக்தியானது தாமதித்துவரும். ஆனால் பகவதநுபவத்தின் ஆனந்தம் அளவற்றது. ப்ரபன்னனுக்குப் பயன் சீக்கிரம் கிடைக்கிறது. ஆனால் இங்கே உயிருடனிருக்கும் காலமானது பகவதநுபவத்தின் ஆனந்தத்தில் குறைந்ததாயிருக்கும் என்றபடி.

உண்மையில் உபாயம் ஒன்றே என்று கூறியதை இது வலியுறுத்துவது கவனிக்கத்தக்க்து.

### முடிவுரை :

பாண்டிய அரசனான வல்லப தேவன் இரவில் கறுப்பு உடுத்து நகர்ச் சோதனை செய்து வருமளவில் ஒரு வீட்டுத் திண்ணையில் ஒரு ப்ராஹ்மணனைக் கண்டு 'உனக்கு ஏதாவது நீதி தெரிந்தால் சொல்' என்று வினவ, அவனும்

**வருஷார்த்தமஷ்டமௌ ப்ரயதேத**
**மாஸான்**
**நிஸ்சார்த்தமார்த்தம் திவஸம் யதேத**
**வார்த்தக்யஹேதோ வயஸாநவேன**
**பரத்ர ஹேதோரிஹ ஜன்மனா ச**

என்றுரைத்தான். இதன் பொருளாவது:- மழைக்காலமாகிய ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி என்னும் நான்கு மாதங்களிலும் இன்புற்று வாழ்வதற்காக மற்ற எட்டு மாதங்களிலும் முயலக்கடவன். இரவில் இன்புறுவதற்காகப் பகற்போதில் பாடுபடக்கடவன். கிழவனாகும் போது சிரமமில்லாமல் வாழ்வதற்காக வாலிபப் பருவத்தில் பாடுபடக்கடவன். மறுமையில் இன்புறுவதற்காக இப்பிறப்பில் முயலக்கடவன் என்றபடி.

ஆக இம்மை, மறுமை இரண்டிலும் நல்வாழ்க்கை பெற முயல்வதே புத்திசாலியின் செயல். மறுமையை மறந்து இம்மையில் மட்டும் சுகமாக இருக்கவேண்டும் என்று முயல்வதாலேயே செய்ய வேண்டியதைச் செய்யாதவர்களாகி மரணத்துக்கு அஞ்சுகின்றனர்.

நம் பிடரியில் கை வைத்துக்கொண்டு யமன் இருப்பது போல ஒரு நினைப்பை, எப்போதும் நம் நினைவில் கொள்ள வேண்டும். இதனாலேயே பெரியோர்கள் 'நாளைக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும்' என்று நினைத்தால் அதை இவ்விதமே கூறுவது வழக்கம். 'பிழைத்துக் கிடந்தால் நாளைக்கும் ஒரு காரியம் செய்ய வேண்டும்' என்று.

கட்வாங்கன் என்று ஒரு மஹாவீரனான அரசன் இருந்தான். தேவாசுரயுத்தத்தில் தேவர்களால் அசுரர்களை ஜயிக்க முடியாது போய், இந்திரன் கட்வாங்கனைத் தனக்கு உதவிபுரியும்படி வேண்டினான். ப்ராதபசாலியான அவனும் அசுரர்களைத் தோற்கடித்து தேவர்களுக்கு ஜயத்தை அடைவித்தான். மிக மகிழ்ந்த இந்திரன் அவனை 'உனக்கு வேண்டிய வரம் கேள்' என்ன, அவன் மஹா புத்திசாலியாகையால் 'முதலில் எனக்கு எவ்வளவு ஆயுள் மிகுதியுள்ளது என்பதைச் சொல்லு' என்றான். இந்திரன் 'நீ இன்னும் அரைமணிதான் உயிருடனிருப்பாய்' என்று சொல்ல, அவன் உடனே தேவலோகத்திலிருந்து தனது விமானத்தில் புறப்பட்டுப் பூமியில் தன் தலைநகருக்கு வந்து, ஸ்நாநம் செய்து சாஸ்திர முறைப்படி பகவானிடம் சரணாகதி செய்து முக்தியை அடைந்தான் என்றும் ஸ்ரீவிஷ்ணு புராணம் கூறுவதுடன் அவனைப் புகழ்கிறது.

ஆக மரணத்தின் தரணத்துக்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதையும், அதை அதிசீக்கிரம் செய்து முடிக்க வேண்டும் என்பதையும் கட்வாங்கன் நமக்குக் காட்டியுள்ளான்.



(தொடர்கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாசன் - காஞ்சிபுரம்.

## மூலம் : 144

"சரணௌ திருவடிகளை."

1) 'சரணௌ' என்பதன் பொருள் யாது?

சரணௌ என்பதற்கு இரண்டு திருவடிகள் என்பது பொருளாகும். தமிழிலக்கணத்தில் எண் என்பது ஒருமை, பன்மை என இரண்டு வகைப்படும். ஆனால் வடமொழியிலோ ஒருமை, இருமை, பன்மை என்று எண் இலக்கணம் மூவகைப்படும்.

'சரணௌ' என்பது இருமையையே குறிக்கும். எனவே 'சரணௌ' என்பதற்குப் பெருமானுடைய இரண்டு திருவடிகள் என்பது பொருளாகும்.

2) பகவானுடைய திருவடிகள் இரண்டையும் பற்றிக் கொள்ள வேண்டும் என்பது ஏன்?

பகவான் எங்கும் நிறைந்த பரம்பொருள். 'அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும்' பரம்பொருளை மனத்தால் பற்ற இயலாது. விக்கிரகத்தோடு கூடிய நிலையில்தான் பகவானைப் பற்ற முடியும்.

குற்றங் குறைகள் நிறைந்த சேதனன், பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தில் ஒரு பகுதியாகிய திருவடிகளைப் பற்றும்போது தான் பகவானுடைய அருள் நோக்கு மேற்கிளம்பிச் சேதனனுக்கு வாழ்வு தரும்.

## மூலம் : 145

"இத்தால் சேர்த்தியழகையும் உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது."

1) இருமையைக் குறிக்கும் 'சரணௌ' என்பதால் சொல்லப்படும் பொருள் யாது?

இரண்டு திருவடிகளையும் சொல்லும் 'சரணௌ' என்பதனால், திருவடிகள் இரண்டும் சேரந்திருப்பதன் அழகையும், வேறொருவர் உதவியையும் பொருந்த உபாயத்தின் பூர்த்தியையும் சொல்லுகிறது.

## மூலம் : 146

"பிராட்டியும் அவனும் விடினும் திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும்."

1) இத்திருவடிகளின் குணச்சிறப்பு யாது?

உபாயத் தன்மைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது இத்திருவடிகளே!

புருஷகாரப் பொருளான பிராட்டியாரும் , உபாயப் பொருளான எம்பெருமானும் தம்மைக் கைப்பற்றியவரைக் கைவிட்டாலும் விட்டுவிடுவர். ஆனால், பகவானுடைய திருவடிகளோ என்றும் கைவிடாது, மிக்க உறுதியுடையனவாய்த் தம்மைப் பற்றி நின்றாரைக் காத்து நிற்கும்.

2) பெருமானையும், பிராட்டியையும் விடத் திருவடிகள் எங்ஙனம் சிறந்தனவாம்?

அடியவனுடைய துன்பநிலையைக் கண்டு மனமிரங்கும் பிராட்டியார், இவனிடமுள்ள குற்றங்களைக் கருதிப் பெருமானிடம் இவ்வடியவனைப் பற்றிக் கூறுமலும் இருந்துவிடலாம்.

தன்னடியவன் குற்றமுடையவனாக இருப்பினும், "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்று தன் வாத்சல்ய குணத்தினால் அடியவனைக் காக்கும் பெருமானும் அவனைக் கைவிட்டாலும் விடலாம்.

இவ்வாறு பெருமானும் பிராட்டியும்கூட ஒரொருகால் தம் அடியவரைக் கைவிடுவதுமுண்டு. ஆனால் தம் அழகினால் அடியவரை அப்புறம் செல்லாதவாறு அகப்படுத்திக் கொள்ளும் திருவடிகளோ, தன் அடியாரை விடாது பற்றிக் கொள்ளும் திண்மை வாய்ந்தனவாம்.

எனவேதான் 'வண்புகழ் நாரணன் திண்கழல்கள்' சிறப்புடையன.

## மூலம் : 147

"சேஷிபக்கல் சேஷபூதனிழிந்துறை, ப்ரஜை முலையிலே வாய் வைக்குமாப் போலே."

1) 'பகவானின் திருவடிகளைப் பற்றுதல் சேதனனுடைய சொரூபத்திற்கு இயல்பான செயலே' என்பதனைச் சான்று காட்டி விளக்குக.

பாலுண்ணும் பச்சைக் குழந்தையானது தன் தாயினுடைய மற்ற உறுப்புகளை விட்டு விட்டுத் தன் தாயின் கொங்கையிலேயே வாய் வைக்கும்.



தான் உயிர் வாழ்வதற்கு இடமாக உள்ளது தன்தாயின் கொங்கையே என்பது அக்குழவிக்கு இயல்பிலேயே தெரிந்த ஒன்றும்.

அதுபோலவே, தலைவனாகிய பெருமானைப் பற்றப்புகும் அடியவன் எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டுவிட்டுத் தான் உய்வதற்கு இடனாக உளள எம்பெருமான் திருவடிகளையே பற்றுகிறுன்.

தாயின் கொங்கையில் வாய் வைத்தல் சேயின் இயல்பான செயல். அதுபோலவே, பெருமானின் திருவடிகளைப் பற்றுதல் சேதனனின் இயல்பான செயல் என்பதும் தெளிவாகிறது.

மூலம் : 148

"இத்தால், பிராட்டிக்கிருப்பிடமாய், குணப்ரகாசகமுமாய்ச் சிசுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக் கொள்ளுந் திருமேனியை நினைக்கிறது."

1) திருவடிகளைச் சொல்லும் 'சரணௌ' என்னும் பதம் திருமேனியையும் குறிக்கும் என்பதனை விளக்குக.

பெருமான் திருமேனியின் ஒரு பகுதியே திருவடிகள். 'சரணௌ' என்னும் பதம் இத்திருவடிகளையே குறிக்கிறது. இத்திருவடிகள் பெருமானின் திவ்விய மங்கள விக்கிரகத்தை நினைக்கச் செய்கிறது.

பெருமானின் திருமேனி பெரிய பிராட்டியார் வாழுமிடமாக உள்ளது. வாத்சல்யம முதலான குணங்கள ஒளிர்தற்கு இடனாக உள்ளது; அறத்திற்குப் பகைவனாக இருந்த சிசுபாலனையும் தன் அழகால தன்னை விரும்புமாறு செய்து அவனுடைய பகைமையையும் போக்கச் செய்வதாய் அமைந்தது.

இதனால், பகவானின திருவடிகள் திருமேனியையும் குறிக்கிறது என்பதனை உணரலாம்.

2) இம்மூலத்தால் உணரப்படும் சிறப்புப் பொருள் யாது?

திருமேனி 'பிராட்டிக்கு இருப்பிடம்' என்பது 'ஸ்ரீமத்' என்னும் பதத்தால் அறியப்படும் செய்தியாகும்.

'குணப்ரகாசகமுமாய்' என்பது 'நாராயண' என்னும் பதத்தின் பொருளைக் குறிக்கிறது.

'சிசுபாலனையும் அகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனி' என்பது 'சரணௌ' என்னும் திருவடிகளைக் காட்டித் திருமேனியையும் குறிக்கிறது.

"ஸ்ரீமத் நாராயண சரணௌ" என்னும் தொடரின் பொருளை இம்மூலம் குறிப்பாக உணர்த்துவது அறிந்து இன்புறலாம்.

## மூலம் : 149

"சரணம் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக."

1) சரணம் என்னும் பதத்தின் பொருள் யாது?

இரட்சகம், இல்லம், உபாயம் முதலான பொருள்கள் சரணம் என்னும் பதத்திற்கு உண்டு. எனினும், இங்கு உபாயம் என்னும் பொருளே கொள்ளத் தக்கதாம்.

2) சரணம் என்னும் சொல் எச்சொல்லின் பொருளோடு சேர்ந்து முடிகிறது?

சரணம் என்னும் சொல் 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்னும் சொல்லின் பொருளோடு சேர்ந்து முடிகிறது.

3) இஷ்டங்கள் என்பவை யாவை?

இஷ்டங்கள் (விருப்பங்கள்) என்பவை ஆன்மா அர்ச்சராதி மார்க்கத்தில் செல்லுதலும், பரமபதத்தைப் பெறுதலும், எம்பெருமானைத் தரிசித்தலும், அவன் கல்யாண குணங்களை அனுபவித்துக்கொண்டு கைங்கர்யம் புரிதலும் ஆம்.

4) அநிஷ்டங்கள் என்பவை யாவை?

தேகமே ஆன்மா எனக் கருதும் அறியாமை, அவ்வறியாமையின் காரியங்களாகிற விருப்பு வெறுப்புகள், புண்ணிய பாவங்களாய் உருக்கொண்டுள்ள கருமங்கள், இன்ப துன்பங்களை அனுபவித்தற் பொருட்டுத் தேவர் மனிதர் விலங்கு தாவரம் முதலிய சரீரங்கள், தெய்வம் முதலியவற்றால் ஏற்படும் தாபங்கள் முதலியன அநிஷ்டங்கள் எனப்படும்.

5) சேதனன் இறைவன் திருவடிகளை ஏன் உபாயமாகப் பற்ற வேண்டும்?

இஷ்டங்களை அடைவதற்கும், அநிஷ்டங்களை நீக்குவதற்கும் தப்பாத உபாயமாக இறைவன் திருவடிகள் விளங்குவதால், அத்திருவடிகளைச் சேதனன் உபாயமாகப் பற்ற வேண்டும்.

## மூலம் : 150

"இத்தால் - ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது."

1) பகவானாகிற உண்மைப்பொருளே, உபாயமாகவும் உள்ளது என்பதைக் குறிக்கும் கருத்து யாது?

எம்பெருமானை உபாயமாகச் சொல்லுகிற சரணத்தால், உபாய வஸ்துவே உபேயமாகவும் உள்ளது என்னும் கருத்து இம்மூலத்தில் குறிக்கப்படுகிறது.

உபாயமும், உபேயமும் ஒன்றாகவே உள்ளது என்பது குறிக்கப்படுகிறது.

பகவானுடைய திருவடிகளே உபாயமாகவும், உபேயமாகவும் உள்ளது என்பது கருத்தாம்.

(ப்ராப்யம்=பெறுவது; ப்ராபகம்= பெறுமாறு செய்வது.)

## மூலம் : 151

"கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே?"

1) முன்பு கூறிய மூன்று பதங்களில் உபாயத்தைப் பற்றிய பேச்சு உண்டா? என்பதனை விளக்குக.

"ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்பவை முன்பு சொன்ன மூன்று செய்திகள்.

ஸ்ரீமந் - பிராட்டியாரோடு கூடியிருத்தல்.

நாராயண - கல்யாண குணங்களைப் பெற்றிருத்தல்.

சரணௌ - திவ்விய மங்கள விக்கிரகத்தோடு கூடியிருத்தல். ஆகிய இவை மூன்றும் சேதனன் அனுபவிக்கத் தக்க பொருளாகச் சொல்லப்பட்டுள்ளது.

எனவே, முன்பு கூறிய மூன்று பதங்களில் உபாயத்தைப் பின் பற்றிப் பேசப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

## மூலம் : 152

"இவன் செயலுறுதியாலே உபாயமாக்குகிறானத்தனை"

1) உபேயப் பொருளான பகவானையே சேதனன் உபாயமாகப் பற்றுவானேன்?

பகவானைத் தவிர வேறு பொருள்களை நன்மை தரக்கூடியனவாகவும், வேறொருவரை இரட்சகப்பொருளாகவும் கருதுவதில்லை.

எனவே, உபேயப் பொருளான பகவானையே உபாயப் பொருளாகப் பற்றிக்கொள்ளுகிறான். இதனால் சேதனன் பகவானையே உபாயமாகவும், பயனாகவும். கொள்கிறான்.

2) இக்கருத்தினைச் சான்று ஒன்றால் விளக்குக

ஒருவனுக்குப் பித்த நோய் வந்து விடுகிறது. அவனுக்குக் குடிப்பதற்குப் பாலைக் கொடுக்கின்றனர். பித்த நோயாளியாதனால், அவனுக்கு மற்றப் பொருள்களைப் போலவே பாலும் கசக்கிறது.

எனினும், பாலையே மருந்தாக மருத்துவர் கொடுத்து உண்ணச் சொல்கிறார். அப்போது பால் ஒன்றே நோயா

ளிக்குப் போக்கியமாகவும், மருந்தாகவும் இருவகைகளில் பயனை அளிக்கிறது.

அதுபோலவே, சேதனனுக்குப் பகவானே உபாயமாகவும், உபேயமாகவும் இருந்து பயன் தருகிறான்.

மூலம் : 153

" 'சரணௌ சரணம்' என்கையாலே - உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது."

1) உபேயத்தையே உபாயமாகச் சொல்லுவதனால், இங்கு இவ்வுபாயத்திற்குள்ள சிறப்பு யாது?

பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருத்தல், கல்யாண குணங்களோடு கூடியிருத்தல், திவ்ய மங்கள விக்கிரகத்தோடுங் காட்சியளித்தல் ஆகிய மூன்று நிலைகளிலும் கூடிய பெருமானையே உபாயமாகச் சொல்லுவதால், மற்ற உபாயங்களைக் காட்டிலும் இவ்வுபாயம் சிறப்புடையதாம்.

2) மற்ற உபாயங்கள் யாவை?

கன்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் எனப்படும் மூன்றும் மற்ற உபாயங்களாம்.

3) கன்ம யோகம் என்றால் என்ன?

அடியவன் தன் நிலைகளுக்கு ஏற்பச் சில செயல்களைச் செய்கிறான். அவ்வாறு செய்யும் பொழுது அச்செயல்களைத் தான் செய்வதாக எண்ணுவதில்லை. இச்செயல் என்னுடையது என்று அகங்காரம் கொள்ளுவதில்லை. இம்மை, மறுமைப் பயன்களையும் எண்ணிச் செய்வதில்லை. பகவானின் முகமலர்த்திக்கு உறுப்பாகவே இச்செயல்களைச் செய்கிறான். இவ்வாறு செய்யப்படுவதே கன்ம யோகம் என்பபடும்.

4) ஞானயோகம் என்றால் என்ன?

பகவானுக்குச் சரீரப்பொருளாக உள்ள ஆன்மாவைப் பற்றிச் சிந்தித்தல் ஞானயோகம் எனப்படும்.

5) பக்தி யோகம் என்றால் என்ன?

விக்கிரக குணங்கள், ஆன்ம குணங்கள் இவற்றோடுங் கூடிய பெருமானை வேறு பொருள்கள் கலவாமல், தைலதாரையைப் போல் (எண்ணெயொழுக்கு போல்) இடைவிடாமல் அன்போடு சிந்தித்தல் பக்தி யோகம் எனப்படும்.

6) 149 முதல் 153 வரையுள்ள மூலங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.

சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருள். எம்பெருமானை உபாயம் என்று சொல்லுகிற சரணம் என்னும் பதத்தால் உபேயமே உபாயம் எனச் சொல்லுகிறது.

பிராட்டியாரோடு சேர்ந்திருந்தல், கல்யாண குணங்களுக்குக் கடலாயிருத்தல், திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பெற்றிருத்தல் ஆகிய இம்மூன்றும் கூடியிருப்பவனாகிய பெருமானே பலனாம்.

வேறு நன்மையற்றிருக்கை (ஆகிஞ்சன்னியம்), வேறு இரட்சகப்பொருள் அற்றிருக்கை (அநந்ய கதித்வம்) ஆகியவற்றையுடைய சேதனன் உபேயனான பெருமானையே உபாயமாகப் பற்றுகிறான்.

மற்ற உபாயங்களைக் காட்டிலும், பெருமானாகிற உபாயம் சிறப்புக்குரியது" ஆகிய கருத்துக்கள், மூலம் 149 முதல் 153 வரை சொல்லப்பட்டுள்ளன.

மூலம் : 154

"ப்ரபத்யே - பற்றுகிறேன்."

1) ப்ரபத்யே என்னும் வினைச் சொல்லுக்குப் பொருள் யாது?

ப்ரபத்யே என்னும் வினைச் சொல்லுக்குப் பொருள் 'பற்றுகிறேன்' என்பதாம்.

'பத' என்னும் வினையடியிலிருந்து இது உண்டானது. இது தன்மை வினைமுற்று.

மூலம் : 155

"வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை; ஜ்ஞாநாந் மோக்ஷ மாகையாலே மாநஸமாகக் கடவது."

1) பெருமானை எந்தக் காரணத்தால் பற்றவேண்டுமென்று சொல்லுகிறார்?

பெருமானை மனத்தினால் பற்ற வேண்டுமென்கிறார். 'என்னைக் காத்தல் வேண்டும்' என்று வாக்கினால் வேண்டுதல், கையினால் பகவானை வணங்கி, இரட்சகனாகிய அவரிருக்குமிடத்திற்குச் செல்லுதல் ஆகிய இவ்விரு வகையாலும் பெருமானைப் பற்றினாலும் பலன் கைகூடும்.

ஆனாலும், ஞானத்தில் மோட்சம் என்று கூறப்பட்டிருத்தலால், மனத்தினால் பெருமானைப் பற்ற வேண்டும் என்பதை இங்கு ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

## மூலம் : 156

"உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயமல்லாமை யாலும் இம்மூன்றும் வேணு மென்கிற நிர்பந்தமில்லை."

1) பெருமானை மனத்தினால் மட்டும் பற்றினால் போதுமா? விளக்குக.

மனம், வாக்கு, காயம் என்பன முக்கரணங்கள் எனப்படும். பலனைப் பெறுதற்கு மனப்பற்றுதல் ஒன்றே போதுமானது. மூன்றும் வேண்டும் என்னும் நிர்ப்பந்தமில்லையென்று ஆசிரியர் தெளிவாகக்கூறுகிறார்.

சேதனன் பலன் பெறுதலுக்கு உண்மையான உபாயம் பெருமானே! முக்கரணங்களாலும் பெருமானைப்பற்றுதல் உபாயம் போலவே தோன்றினாலும், இவை உண்மையான உபாயங்களாகா!

பயனைப் பெறுதற்கு மனப் பற்றுதல் ஒன்றே போதுமாகையால், மூன்றும் வேண்டும் என்கிற நிர்ப்பந்தமில்லை.

மூன்றும் வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை என்று கூறியுள்ளதால், வாயினால் துதித்தல், காயத்தால் வணங்கல், மனத்தினால் சிந்தித்தல் ஆகிய மூன்றினால் பற்றினாலும் குற்றமில்லையென்பது ஆசிரியர் கருத்தாம்.

## மூலம் : 157

"வர்த்தமாந நிர்த்தேசமா - ஸத்வம் தலையெடுத்து அந்தின போது அநுஸந்திக்கைக்காக."

1) 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்று நிகழ்கால வினை முற்றாகச் சொல்லியிருப்பது ஏன்?

"அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே", "நின்னடியிணை அடைந்தேன்" என்பன போல ஆழ்வார்கள் 'புகுந்தேன்', 'அடைந்தேன்' என்று இறந்தகாலமாகவே சொல்லியுள்ளனர்.

ஆனால், இங்கு 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்று நிகழ்காலத்திலேயே சொல்லப்பட்டுள்ளது.

சேதனன் உடலோடுங்கூடி இவ்வுலகில் வாழ்கிறான். அப்போது ரஜசு, தமசு குணங்கள் தலையெடுக்கும். இதனால் கன்ம, ஞான, பக்திகளாகிற வேறு உபாயங்களிலும் நுழையக்கூடும். தீய செயல்களாகிற அபாயங்களையும் செய்யக்கூடும். இவ்வாறு செய்வது சேதனன் நிலைக்குப் பொருந்தாது.

இவனிடம் சத்துவ குணம் தலையெடுக்கும் போது முன் செய்த செயல்களுக்காக வருத்தப்படுவான். தான் செய்த தீச்செயல்கள் குறித்து அச்சப்படுவான்.

அப்போது தன் செயல்களுக்கு வேறு பரிகாரம் தேடும் தகுதியை இழந்தவனாகிறான். "பகவானே உன் திருவடிகளைப் பற்றுகிறேன்" என்று நிகழ்காலத்திலேயே சிந்திக்கிறான். எனவேதான், பிரபத்தி நிகழ்காலத்திலேயே சொல்லப்பட்டுள்ளது. (தொடரும்)



## நமது புராணங்களில் தெய்வங்கள்

நமது சமயத்தில் 18 புராணங்களும், 18 உபபுராணங்களும் உள்ளன. இவற்றில் பாகவதம், வாமனம், வராகம், மத்ஸம், கூர்மம், நாரசிம்மம், கபிலம், கல்கி, ஹம்சம் முதலிய 9ம் விஷ்ணுவின் அவதாரங்களைப் பற்றியவை. விஷ்ணுபுராணமும் பத்ம புராணமும் பகவானைப் பற்றியவை. சைவம், லிங்கம், சிவரகஸ்யம் இவை சிவபெருமானைப் பற்றியவையாம்.

பிரம்மபுராணம் என்ற ஒன்று பிரம்மாவைக் குறித்தது. தேவி பாகவதம் சக்தி, லக்ஷ்மி, சரஸ்வதிக்கு உரியது. ஸ்காந்தம் கந்தனாகிய ஸ்ரீசுப்ரமணியர்க்கு. காணபதம் கணபதிக்கு. சௌரம் சூரிய தேவனுக்குரியது. ஆக்னேயமும் வருணமும் முறையே அக்னி, வருணன் என்ற தேவர்களுக்குரியன. நந்தியமும் கருடபுராணமும் முறையே வாகனங்களாகிய நந்திக்கும் கருடனுக்குமாம்.

நாரதீயம், மார்க்கண்டேயம், பார்க்கவம், தௌர்வாசம், வசிஷ்டம், பராசரம் இவை முறையே நாரதர், மார்க்கண்டேயர், பிருகு, துர்வாசர், வசிஷ்டர், பராசரர் ஆகிய ரிஷிகளைப் பற்றியவை. நாரதருக்கு நாரதீயம் என்ற ஓர் உபபுராணமும் உண்டு.

இன்னும் பொதுவாக பவிஷ்யோத்தரம், பிரம்மாண்டம், பிரம்மகைவர்த்தம், சரத்குமாரியம், மானவம், சாம்பம் என்னும் 6 புராணங்களும் உள்ளன. ஆக மொத்தம் 18 புராணங்களும் 18 உபபுராணங்களும் உள்ளன. வேதங்களில் உள்ள விஷயங்கள் எல்லாம் புராணங்களில் சுவைபட வேதவியாசர் என்பவரால் சொல்லப்பட்டுள்ளன. இவையெல்லாம் சம்ஸ்க்ருத மொழியில் உள்ளன. இவைகளில் சிலவே தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கயத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்ளையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

சலுகைகள் :

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. **15,000**

### விருக்ஷ ப்ரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

சலுகைகள் :

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

சலுகைகள் :

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. **2000**

### வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும்.

சலுகைகள் :

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.
* ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. **1000**

### அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக்கப்படும்.

சலுகைகள் :

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. **500**

### விருக்ஷ தத்ததா

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள்ளப்படும்.

சலுகை :

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. **250**

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் எம். வரதராஜன் - திருப்பதி.

## ஈ

ஈ - நாசம், தேனீ, வண்டு, சிறகு.

ஈங்கு - இங்கே

ஈசர் - விண்ணோர்பிரான்

ஈசன் - பகவான், சிவன், அரசன், குரு, தலைவன்

ஈசி - சீ சீ - அருவருப்புக்குறிப்பு

ஈட்டம் - கூட்டம், திரள்

ஈட்டவெறி - திரண்ட பரிமளம்

ஈட்டுதல் - திரட்டுதல்

ஈடழிகை - கெட்டுப்போகை, ஒப்பில்லாமை

ஈடறவு - எளிவரவு

ஈடு - அதிகாரம், தகுதி, இடுகை, வலிமை, பொருத்தம். (நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிக்கு நம்பிள்ளை என்னும் ஆசார்யரின் வ்யாக்யான செப்புநெறியை ஒருகால் ஒருசுழி ஒரு கொம்பு விடாது பட்டோலை எழுதியவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை என்னும் ஆசார்யராவர். இவ்வியாக்யானத்திற்கு ஈடு என்று பெயர்.)

ஈடு இடாதே - கவசம் தரியாதே

ஈடுபாடு - வருத்தம், நலிவுபாடு, நன்றாக மனம் பதிகை

ஈடும்வலியும் - கனமும் மிடுக்கும்

ஈண்டென - சீக்கிரமாக

ஈண்டு - இப்போது, இவ்விடத்தில்

ஈண்டிய சங்கு - திரண்டவளை

ஈதல் - ஒழிதல்

ஈத்த தமிழ் - எல்லாரும் அறியும்படி கொடுத்த ஸர்வாதிகாரமான திராவிடமொழி

ஈது - இப்போது

ஈப்பாய் - அளிப்பாய்

ஈர்க்கு - ஈர்க்குச்சி

ஈர்த்தல் - இழுத்தல்

ஈர்மை - ஈருகை, ஈரப்பாடு, ஈடுபடுதல்

ஈரக்கையாலே ஸ்பரிஸித்து - கருணையாலே கடாக்ஷித்து

ஈர்வது - பிளப்பது

ஈரங்கொல்லி - வண்ணான்

ஈரச்சொற்கள் - பக்தி ரஸம் நிறைந்த/ மிகுந்த சொற்கள்

ஈரடி - இரண்டு திருவடிகள்

ஈரநெல் - ஆசையாகிற நெல்

ஈரரசு - இரட்டை ஆட்சி

ஈரரி - பிளக்கப்படும் அரி - சத்ரு, பெரிய விரோதி என்றுமாம்.

ஈரியாய் இருக்கை - நெஞ்சு நெகிழாதிருக்கை.

ஈரவன் - சந்திரன்

ஈரவாடை - குளிர்ந்த காற்று

ஈரவாடைத் தீர்த்தம் - திருமஞ்சனம் ஆனபிறகு பெருமாளுடைய ஈரமான ஆடையைப் பிழிந்து கொடுக்கும் தீர்த்தம். நம்பெருமாள் திருமஞ்சனம் கண்டருளியதும் அந்த ஆடையைப் பிழிந்து கோஷ்டிக்குத் தீர்த்தம் விநியோகம் செய்வர்.

ஈரறுவர் - பன்னிரெண்டு ஆதித்தியர்கள்

ஈராப்புகுதல் - புகுந்து ஈருகிறதில்லை; ஈர்ந்து கொண்டே புகுவதாகும்.

ஈரிறை - ஈரரசு

ஈருருவன் - பெரிய ஈச்வரன்

| | | |
|---|---|---|
| ஈர்க்கின்றவன் | | தன்னை அடைந்தவர்களது விரோதியைத் தன் வசமாக நடத்துபவன். |
| ஈரெயிற்றழல்வாய வாளி | - | இரணடு எயிற்றை உடையதாய் நெருப்பை உமிழும் அம்பு. அதாவது பூட்டப்பட்ட இரண்டு பற்களையுடையதாய் தொடுக்கும் போது அம்பாய் எதிரிகள் மேலே தைக்கும் போது நெருப்பாயிருக்கும். ஈரெயிறு - பிறைவாய்ப்பாயுள்ள இரண்டு நுனி, எயிறு-பல், பல் போன்ற நுனி. |
| ஈரைஞ்ஞூறு | - | ஆயிரம் |
| ஈரைந்தலையான் | - | கொத்துத்தலைவன் என்னும்படி பத்துத்தலையை யுடைய இராவணன் |
| ஈரைம்பதின்மர் | - | நூற்றுவர், துரியோதனன் முதலான நூறு கௌரவர்கள் |
| ஈவன் | - | தரக்கடவன் |
| ஈவு | - | அழிவு |
| ஈழம் | - | ஈழநாடு, இலங்கை, வைணவ ஆசார்யர்கள் ஈழநாட்டுக்குப் போனவர் களல்லவாகையாலே 'ஈழம் கனாக்காண்பாரில்லையே' என்று அது அவர்களுக்குக் கனாக் காண்பதற்குக் கூட தகுதியில்லாதிருந்தது என்பர். |
| ஈழம்பிரம்பு கொண்டது | - | இலங்கையில் காப்பிச் செடிகள் அதிகமாகையாலே காப்பிக்குச்சிகள் நிறைந்திருக்கும் என்பர். |
| ஈளை | - | கோழை |
| ஈற்றிளம் பிள்ளை | - | ஈன்று அண்ணியபிள்ளை. அதாவது ஈறு என்று எல்லையாய் பிள்ளைத்தனத்திலே எல்லையானவன்; ஈறு-முடிவு, ஈறுன இளம்பிள்ளை அல்லது ஈன்றிளம் பிள்ளை என்று கொண்டு கற்றிளம் பிள்ளை என்பர். |
| ஈற்றுத்தாய் | - | பெற்றெடுத்ததாய் |
| ஈறிட்டு | - | சபதம் பண்ணி, வீறிட்டு |
| ஈறில | - | முடிவில்லாத, நித்தியமான |
| ஈன் கரும்பு | - | இனிய கரும்பு, இன் கரும்பு என்பது நீட்டிக்கிடக்கிறது. |
| ஈன்கனி | - | பழுத்தபழம் |
| ஈனமர் சாபம் | - | தண்மையை விளக்கக்கடவதான சாபம். |
| ஈனனம் | - | வெள்ளி |
| ஈன்பனி | - | உண்டான பனி, சொரிகிற பனி, பெய்பனி. |
| ஈன்றனை | - | பெற்றனை |
| ஈனச்சொல் | - | இழிவான சொல் |
| ஈனம் | - | குறைவு |

## உ

| | | |
|---|---|---|
| உக்க | - | முடிய உதிரும்படியாக |
| உக்கம் | - | விசிறி, கோழி, மருங்கு, பசு |
| உகங்கள் | - | யுகங்கள் |
| உகட்டு | - | தலை மண்டையிட்டு, ஆரவாரம் செய்து |
| உகந்தருளின நிலங்கள் | - | எம்பெருமான் ப்ரீதியாக எழுந்தருளியிருக்கிற திவ்யதேசங்கள் |
| உகிர்த்தலம் | - | நகத்தின் நுனி |
| உகுக்கும் | - | பெருகா நிற்கும் |
| உகுப்பது | - | தெளிப்பது |
| உகும் | - | தளரும், ஒழுகிப்போகாநின்றது. உக்கிப்போகாநின்றது. |
| உகுமிறும் | - | நீர்ப்பண்டமாய் தளர்ந்து விழாநிற்கும் |
| உகைத்தல் | - | நெகிழாநிற்றல் |
| உச்சமதாம்வீடு | - | மேல் வீடு |
| உச்சிமணிச்சுட்டி | - | உச்சியிலே இடும் ஆபரணம் |
| உச்சியது புருவமாக | - | கோபத்தால் புருவம் மேலே ஏறியிருப்பது |
| உச்சியில் முத்தி | - | உச்சி மோந்து, முத்தி-முத்தமிட்டு மோதி-மோந்து |
| உச்சி | - | பகல், முடி, நடுப்பகல் உச்சந்தலை |
| உச்சியிலெண்ணெய் | - | உச்சியில் தடவும் எண்ணெய், உச்சியெண்ணெய் வைப்பது என்பது சிறு குழந்தைகளுக்குத் தினமும் காலையில் உச்சிக்குழியில் தடவுவது வழக்கம். |
| உச்சியெண்ணெய் | - | உச்சியிலே ஊற ஊற எண்ணெய் இடுகை |
| உச்சிவீடுவிடாதே | - | ஓய்வின்றி, உச்சிவீடு-வானின் உச்சியில் சூரியன் |

ஒய்வு பெறுவது

உசாச்செல்ல - உசாவிச்செல்ல, ஆராய்ந்து கொண்டு விசாரித்துச்செல்ல

உசாத்துணை - பேச்சுத்துணை

உசாவி - விசாரித்து

உட்க - நெஞ்சு உளுக்கும்படியாக

உட்கண் - ஞானக்கண்

உட்குடை அசுரர் - மிடுக்கான அசுரர்கள்

உட்குடை ஆயிரம் - பேசுவதை நன்றாய் பேசும் சக்தியோகமுள்ள ஆயிரம் பாடல் (திருவாய்மொழி)

உடையாளர் - உடையவர்

உடைவாள் - அரைப்புடவையில் சொருகுகிற வாள்

உடோ - அடா, டேய்

உட்குடை வானவர் - பகவத்குணங்களை முழுமையாக அநுபவிக்கைக்கு ஏற்ப தகுதியை சக்தியோகத்தையுடைய அயர்வறும மரர்கள்.

உடம்பன் - உடம்பு படைத்தவன்

உடல்மிசை உயிர் - சரீரத்தில் உயிர்

உடலாக - உதவியாக, அவனுக்கு உடலாக அவனுக்காக.

உடலாழிப்பிறப்பு - சக்ரரூபமான சரீரம் அங்கங்களிலே பிறப்பு, அதாவது சக்ரவடிவமாக மாறி மாறிப் பிறக்கும் பிறப்பு.

உடலுள்ளான் - சரீரத்தினுடைய இருதய பாகத்திலே இருக்கிறவன்

உடலுளவிழ்ந்து - உடல் உள் கவிழ்ந்து, உடலும் வெதும்பி உருகி, உளவிழ்ந்து நெஞ்சில் நிலைமை குலைந்து; உடலும் மனசும் கெட்டு.

உடன்கூடுவது - ஒரு நீராம்படி உடன்பட்டுக்கூடுவது

உடன்கேடன் - கூடக்கெட்டுக்கிடக்குமவன் கேடு காலத்தில் கூட இருந்து அநுபவிப்பவன்

உடன்று - கோபித்து

உடன்மண நீராடுகை - தம்பதிகள் இருவரும் ஒரு புடவை உடுத்து நீராடுகை

உடனாய் மன்னி - பிரியாதபடி பொருந்தி

உடைகுலைப் படுகை - நிலைகுலைந்து போகை. குலை-கரை, உடைபடுகை

உடைநாணினன் - அரைநூல் வடம், அரைநாண், உடைமேலே கட்டின பொன்நூலினன், அரைநாண் தரித்தவன்

உடைபாடு கொண்டான் - உடைமையான செல்வத்தைக் கொண்டான். உடைமையையும் செல்வத்தையும் கொண்டான். மாடு-செல்வம், தனம்.

உடையம் - உடையோம்

உடையவர் - விண்ணுலகமும் மண்ணுலகுமான உபயவிபூதிக்கும் தலைவர் என்று ஸ்ரீராமானுசருக்கு நம்பெருமாள் வைத்த திருநாமம்.

உடையவிட்டு - அழித்து

உடையன - உடையவை

உடையாடை - உடுத்திக் கொள்ளத்தக்க ஆடையை

உடையவன்

இல்லை என்று தளர்தலுக்கு மேலும் இது கடுமை. ஏனெனில் நித்ய தரித்திரன் வருத்தம் அறியான். உண்டவன் இல்லையென்று தளர்வது பெரும் வருத்தமாகும்.

உண்டறுக்க மாட்டாத - உண்டு ஜீரணிக்க, ஜரிக்க மாட்டாத நன்றாய் அநுபவிக்கமாட்டாத

உண்டாயை - உண்ட உன்னை

உடம்பு தின்னார் - உடலே ஆத்மா என்று இருப்பவர்கள். உடம்பை வளர்ப்பதற்காகத் தின்பது தவிர ஆத்மாவைப் பற்றி என்றும் அறியாதவர்கள்.

உண்டி உடல்காட்டும் - உணவின் பயன் உடலிலே தெரியும்

உண்டில்லை என்று தளர்தல் - உண்டு இல்லை என்று தளர்தல், அதாவது ஒரு நாள் உண்டால் அதுஇல்லையானவாறே தளர்தல்.

உண்டை - வில்லில வைக்கும் உருண்டை

உண்டையும் பாவும் - ஊடையும் பாவும் என்று நெசவுகாரர்களின் பேச்சு

உண்ணாட்டுத்தேசு - பரமபதத்திலிருக்கும் ஒளி

உண்ணாடு - அந்தரங்கம், பரமபதம், உள் நாடு

உண்ணாதபெரு வெள்ளம் - தகைய முடியாத பெரு வெள்ளம்

உண்ணாழிகை - கருப்பகிரகம் (பெருமாள் உறையும் இடம்)



## செய்திச் சுருக்கம்

### திருமலையில்

அண்மையில் பாரதப்பிரதமர் திரு.பி.வி. நரசிம்மராவ் அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார். பிரதமர் அவர்களுக்கும், அவருடன் வருகை புரிந்த ஆந்திர மாநில முதல்வர் திரு. கே. விஜயபாஸ்கர் ரெட்டி அவர்களுக்கும் வேத பண்டிதர்களால் கோயில் மரியாதை அளிக்கப்பட்டு, அவர்களை தி.தி. தேவஸ்தான துணைச் செயலாட்சித் தலைவர் (கோயில்) திரு. வாசுதேவன் அவர்கள் வரவேற்றார். கோயில் வளாகத்தில் அரை மணிநேரம் இருந்த பிரதமர் அவர்களுக்கு, திருமலை ரங்கநாயகுல மண்டபத்தில் திருமலைக் கோயில் தலைமை அர்ச்சகர் திரு. ராமச்சந்திர தீட்சுதுலு அவர்களால் கோயில் சார்பில் பட்டு வஸ்த்தரம் வழங்கப்பட்டது. பின்னர் தேவஸ்தான மேலாண்மையின் சார்பில் பிரதமர் அவர்களுக்கு கோயில் பிரசாதமான லட்டு மற்றும் பக்தி ஒளிப்பேழைகள் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல் ரெட்டி அவர்கள் வழங்கினார். பிரதமரின் திருமலை வருகையின்போது ஆந்திரமாநில அமைச்சர்கள் திருவாளர்கள் ஜி. வெங்கட்ரெட்டி, ஆர். செங்காரெட்டி, மாநில பாராளுமன்ற உறுப்பினர்கள் வி. ஹனுமந்தராவ், கங்குல பிரதாப் ரெட்டி, அகில இந்திய காங்கிரஸ் அமைப்பின் பொதுச் செயலர் ஜனார்த்தன் பூஜாரி ஆகியோரும் உடன் வந்திருந்தனர்.

* * *

அண்மையில் தனது மூன்று நாள் பயணமாக இந்தியக் குடியரசுத்தலைவர் டாக்டர் சங்கர்தயாள் சர்மா அவர்கள் தனது மனைவி திருமதி விமலா சர்மாவுடன் திருமலைக்கும், திருச்சானூர்க்கும் வருகைபுரிந்தார். திருமலையில் இருந்தபோது, சுப்ரபாதம், அர்ச்சனை, அபிஷேகம், ஸகஸ்ரதீபாலங்கார சேவை போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டனர். பின்னர் திருச்சானூர் ஸ்ரீமத்மாவதி தாயார் கோயிலுக்குச் சென்று அம்மையாரைத் தரிசித்தனர். இவ்வருகையின் போது குடியரசுத்தலைவர் அவர்களுக்குத் திருமலையில் மேலாண்மையின் சார்பில் கோயில் மரியாதைகளும், பிரஸாதங்களும் வழங்கப்பட்டன. இதுபோது தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. டி.வி. எல்.என். மூர்த்தி, பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி ஆகியோர் உடன் இருந்தனர்.

* * *

சுமார் இரண்டரை கோடி ரூபாய் செலவில் அண்மையில் உருவாக்கப்பட்ட திருமலைக்கோயிலின் புதிய தங்கத் தேரின் 'கலச ஸ்தபனம்' எனும் சமய நிகழ்ச்சிக்கு ஆரம்ப பூஜை ஆந்திர மாநில முதல்வர் திரு. கே. விஜய பாஸ்கர்ரெட்டி அவர்களின் முன்னிலையில் நடைபெற்றது. இப்பூஜையின் போது, ஸ்ரீஸ்ரீஸ்ரீ திரிதண்டி இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகளும் உடன் இருந்தார்.

இதுபோது திருமலையில் தி.தி. தேவஸ்தானத்தாரால் ரூ.

### திருமலை பிரம்மோத்ஸவம்

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் இவ்வருட பிரம்மோத்ஸவம் திருமலையில் 5-10-94 முதல் 14-10-94 வரை வெகுச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நாடெங்கிலும் 'பிளேக்' நோயின் அச்சம் நடமாடினாலும், இவ்வருடம் எந்த வருடமும் இல்லாதவாறு அதிக எண்ணிக்கையில் யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர். 607520 யாத்திரிகர்கள் தரும தரிசனம் மூலமும், 135512 யாத்திரிகர்கள் சிறப்பு நுழைவு தரிசனம் மூலமும் இறைவனைக் கண்டு களித்தனர். அதாவது சென்ற ஆண்டைவிட மூன்று இலட்சம் யாத்திரிகர்கள் அதிகமாக வருகை புரிந்தனர். 10-10-94 அன்று நடைபெற்ற கருட சேவை, 11-10-94 அன்று முதன்முதலாக கோயில் உத்ஸவ மூர்த்திகள் எழுந்தருளி வீதிவலம் வந்த தங்கத்தேர்விழா, 13-10-94 நடைபெற்ற மகாரதத் தேர்விழா ஆகியற்றின்போது, திருமலையானது பக்தர்களால் நிரம்பி வழிந்தது. இப்பிரம்மோத்ஸவத்தின் போது உண்டி மூலமாக ரூ. 1,93,94875, சிறப்பு நுழைவுச் சீட்டு விற்பனை மூலம் ரூ. 5,39,0285, லட்டு பிரஸாத விற்பனை மூலம் ரூ. 25,79640 ஆக கோயில் வருமானம் சுமார் ரூ. 2.74 கோடியாகும். இது சென்ற ஆண்டைவிட ரூ. 71.23 இலட்சம் அதிகமாகும்.

சென்ற இதழில் வெளியிடப்பட்ட "தங்கவாயிலோனுக்கு ஒரு தங்க ரதம்" எனும் கட்டுரையில் தங்கத்தேர் உருவாக்க 78 கி.கி. செப்பு பயன்படுத்தப்பட்டதாகவும் தங்கத்தகடுகள் உருவாக்க மான்தோல் திரைகளைக்கொண்ட புத்தகம் பயன்படுத்தப்படுவதாகவும் தகவல் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் 780 கி.கி. செப்பும், ஒட்டகத்தோல் திரைகளைக்கொண்ட புத்தகமும் பயன்படுத்தப்பட்டது என்பதை இத்திருத்தம் வாயிலாக வாசகர்களுக்குத் தெரியப்படுத்துகிறோம்.

--ஆர்.

திருமலைக்கோயிலில் இவ்வருட 'புஷ்பயாக மகோத்ஸவம்' இம்மாதம் 10ஆம் தேதி கொண்டாடப்பட உள்ளது. இது சம்பந்தமான அங்குரார்ப்பண நிகழ்ச்சி இம்மாதம் 9 ஆம் தேதி நடைபெறும். ஆகவே 10-11-94 அன்று திருமலைக் கோயிலில் கல்யாணோத்ஸவம், திருப்பாவாடை, ஸகஸ்ர கலஸாபிஷேகம், ஊஞ்சல் சேவை போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெறமாட்டா.

4.5 கோடி செலவில் புதியதாகக் கட்டப்பட்ட ஸ்ரீவராஹஸ்வாமி விருந்தினர் விடுதியினை முதல்வர் அவர்கள் திறந்து வைத்தார். 215 அறைகளையும், 22 ஓய்வுக்கொட்டகைகளையும் கொண்ட இவ்விருந்தினர் விடுதியில் ஒரே சமயத்தில் 1350 யாத்திரிகர்கள் தங்கலாம்.

* * *

திருமலைக்கோயிலின் புதிய தங்கத்தேரின் வெள்ளோட்டம் சென்ற மாதம் திருமலை மாடவீதிகளில் நடைபெற்றது. ஏழுமலையானின் திருவுருவப்படம் வைத்து பக்தர்களால் இழுத்துச் செல்லப்பட்டபோது, இத்தேர் 40 நிமிடங்களில் நான்கு மாடவீதிகளை எந்தவிதப் பிரச்சனையுமின்றி கடந்து வந்தது.

* * *

## நன்கொடை

அண்மையில் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமிக்கு, கல்கத்தாவைச் சார்ந்த புகழ்பெற்ற தொழில் அதிபர் திரு. மகாவீர் பிரஸாத் போத்தார் அவர்கள் ரூ. 80 இலட்சத்திற்கும் மேலா[illegible] [illegible]ப்புள்ள [illegible]று விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பெற்ற 'மகரகண்டி' எனும் கழுத்தாபரணத்தை நன்கொடையாக அளித்துள்ளார். இவ்வாபரணத்தை, தேவஸ்தானத்தின் சார்பில் தி.தி.தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள் பெற்றுக் கொண்டார். பிறகு அவ்ஆபரணம் திருமலை நான்கு மாட வீதிகளிலும் திருவீதிவலமாக மேற்கொள்ளப்பட்டு நன்கொடையாளர் வழங்க, மூலவர்க்கு அணிவிக்கப்பட்டது. இச்சிறப்பு நிகழ்ச்சி, ஸ்ரீஸ்ரீஸ்ரீ திரிதண்டி இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகளின் முன்னிலையில் நடைபெற்றது.

திருமலையானுக்குத் தற்போது பிரம்மோத்ஸவ கருடசேவையின்போது பயன்படுத்தப்பட்டுவரும் 'மகர கண்டி' ஆபரணம் பல ஆண்டுகளுக்கு முன்னர் மைசூர் மன்னர்களால் வழங்கப்பட்டதாகும்.

* * *



திருமலையில் தி.தி. தேவஸ்தானத்தாரால் நடத்தப் பட்டுவரும் வேதபாடசாலையில் படித்து வரும் சுமார் 200 வேதப்பயிற்சி மாணவர்களுக்கு குளிர்காலத்தில் பயனுறும் வகையில் ஆந்திர மாநிலம் ஒங்கோலைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினரும், புகழ்பெற்ற தொழிலதிபருமான திரு. மாகண்டி சுப்பராமிரெட்டி அவர்கள் ரூ. 45,000 பெறுமான 200 சால்வைகளை இலவசமாக வழங்கினார். இவற்றை தி.தி. தேவஸ்தான மக்கள்தொடர்பு அலுவலர் திரு. டி. சிவாஜி அவர்கள் மாணவர்களுக்கு வழங்கினார்.

* * *

## நியமனம்

தி.தி. தேவஸ்தானத்தாரின் தாஸ ஸாகித்ய திட்டத்தின் சிறப்பு அலுவலர் பதவிக்கு திரு. கே. அப்பன்னாசார்யா அவர்கள் நிரந்தரமாக நியமனஞ் செய்யப்பட்டுள்ளார்.

* * *

## மற்றைய செய்திகள்

கர்நாடக மாநில அரசினால் பெங்களூரில் மைசூர் சாலையில் இலவசமாக அளிக்கப் பட்ட காலிமனையில் விரைவில் தி.தி. தேவஸ்தானத்தார் திருமண மண்டபம் ஒன்றினைக் கட்ட உள்ளனர்.

* * *

திருச்சானூரில் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயிலுக்கென புதிய தேர் ஒன்று தி.தி. தேவஸ்தானத்தாரால் உருவாக்கப்பட உள்ளது.

* * *

திருப்பதியிலிருந்து சோளிங்கர் செல்லும் வழியில் கார் வேட்டுநகரம் எனும் ஊரில் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேணுகோபால சுவாமி கோயிலையும், கோயிலிலிருந்து வெகு தூரத்திலுள்ள, திருக்குளத்தினையும் இணைத்திடும் வகையில் சாலை ஒன்றினை வேய்ந்திட தி.தி. தேவஸ்தானம் தீர்மானித்துள்ளது.

* * *

## கோயில் வருமானம்

திருமலைக்கோயிலின் வருமானம் இவ்வருட ஏப்ரல் மாதத்திலிருந்து ஆகஸ்டு மாதம் வரை எதிர்பார்க்கப்பட்டது ரூ. 61.5 கோடியாகும். ஆனால் எதிர் பார்த்ததைவிட கிடைத்த வருமானம் ரூ. 70.08 கோடியாகும். இதில் ஆகஸ்ட் மாதத்தில் மட்டும் எதிர்பார்த்த வருமானம் ரூ. 12.3 கோடியாகும். கிடைத்த வருமானம் ரூ. 14.75 கோடியாகும்.

* * *

## கருத்தரங்கு

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில மனித இயல் துறை சார்பில், அண்மையில் "திருப்பதி - திருமலை கண்ணோட்டத்தில் யாத்திரிகர்களும் யாத்திரையும்" என்ற தலைப்பில் கருத்தரங்கு ஒன்று வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இக்கருத்தரங்கின் துவக்கவிழா பல்கலைக்கழக மன்ற வளாகத்தில் நடைபெற்றது. இக்கருத்தரங்கினை 'இந்து' ஆங்கில நாளேட்டின் ஆசிரியர் திரு. என். ரவி அவர்கள் திருவிளக்கேற்றித் துவக்கி வைத்தார். அவர்தம் துவக்க விழா சிறப்புரையில், யாத்திரிகர்களின் பிரச்சனைகளை மனதிற்கொண்டு தி.தி. தேவஸ்தானம் தன்னிடமுள்ள ஒரு சில துறைகளைத் தனியாரிடம் ஒப்படைப்பதைப் பற்றி சிந்திக்க வேண்டும் என கேட்டுக்கொணடார். விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசிய பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் பி. ஜெயராம் ரெட்டி அவர்கள், 'திருமலை - யாத்திரிகர்கள் தேவஸ்தானம்' ஆகிய மூன்று பேருக்கும் இருக்க வேண்டிய உறவினை விளக்கினார். மனயமைதியைத் தேடிவரும் ஒரு யாத்திரிகன் எந்த நிலையிலும் இன்னல்களுக்கு ஆளாகக்கூடாது என்பதில் தேவஸ்தானம் மிகவும் கவனமாக இருத்தலின் அவசியத்தைக் குறிப்பிட்டுப் பேசினார். தொடர்ந்து பேசுகையில் தேவஸ்தான ஊழியர்களுக்கு, இந்து சமயப்பெருமையினை உணரும் வகையில் சில அடிப்படைச் சமய அறிவினை உணர்த்த வேண்டிய தன் இன்றியமையாததை வலியுறுத்தினார். நாகரீகத்தின் உச்சியில் இருக்கும் அமெரிக்காவிலேயே, சமயவழிபாட்டுத்தலங்கள், பள்ளி நிலையங்கள் ஆகியவற்றைச் சுற்றி வெகுதூரம் வரை மதுக்கடைகள் இல்லாதவாறு சட்டங்கள் இருக்கும்போது, திருப்பதி போன்ற புனிதத்தலங்களில் இதுபோன்ற மதுபானக்கடைகளை உடனடியாக அப்புறப் படுத்தப்பட வேண்டியதன் அவசரத்தைச் சுட்டிக்காட்டிப் பேசினார்.

இவ்விழாவில் சிறப்பு விருந்தினராக பங்கேற்று உரையாற்றிய, தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள், மற்

றைய புனிதத்தலங்களைக் காட்டிலும் திருமலை எந்தவகையில் அதிகமான பொறுப்புகளை, தேவைகளை எதிர் நோக்கி வருகின்றது என்பதைக் குறிப்பிட்டு, அவற்றை மனதிற் கொண்டு தேவஸ்தானம் இதுவரை மேற்கொண்ட முயற்சிகளையும், யாத்திரிகர்களுக்குப் புரிந்துவரும் சேவைகளையும் விளக்கிப்பேசினார்.

இவ்விழாவில், மனித இயல் துறையைச் சார்ந்த பேராசிரியர் ஏ. முனிரத்னம் ரெட்டி திரு. பி. ஜெயராம் ரெட்டி ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர்.

* * *

## தெப்போத்ஸவம்

தி.தி. தேவஸ்தானத்தாரின் திருப்பதியிலுள்ள ஒரே சிவன் கோயிலான ஆழ்வார் தீர்த்தத்தை ஒட்டி அமைந்துள்ள ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலின் தெப்போத்ஸவ திருவிழா 16-12-94 முதல் மூன்று நாட்களுக்கு வெகுவிமர்சையாக நடைபெறும். முதல் நாளன்று ஸ்ரீவிக்னேஸ்வரரும், ஸ்ரீசந்திரசேகரரும், இரண்டாம் நாளன்று ஸ்ரீசுப்ரமண்ய சுவாமியும், மூன்றும் நாளன்று ஸ்ரீகபிலேஸ்வர சுவாமியும் தெப்பத்தை அலங்கரிப்பர்.

* * *

## அவதார உற்சவம்

அண்மையில் திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் தி.தி. தேவஸ்தான ஆழ்வார் திவ்ய பிரபந்தத்திட்டத்துறை சார்பில் ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை அவர்களின் 'அவதாரத்திருநாள்' விழா வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழா ஒன்றிற்கு தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள் தலைமை வகிக்க, துறை இயக்குநர் டாக்டர் மேடசானி மோகன் அவர்கள் கூட்டத்தின்ரை வரவேற்க, துறையின் சிறப்பு அலுவலர் திரு. பொன். சௌரிராஜன் அவர்கள் ஆண்டறிக்கை வாசிக்க விழா இனிது துவங்கியது. இவ்விழாவின் போது சிறப்புரை ஆற்றிய ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஸ்ரீமன் திரிதண்டி நாராயண ராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகள் பெரியவாச்சான் பிள்ளை அவர்களின் வியாக்யானத்தின்பெருமையினை, சிறப்பினை விளக்கி, இவ்வியாக்யானத்தைத் தெலுங்கில் மொழிபெயர்க்க வேண்டியதின் அவசியத்தையும் குறிப்பிட்டார். பின்னர் துறையின் கண்காணிப்பாளர் திரு. ஆர். வெங்கடரமணரெட்டி அவர்கள் நன்றி, நவின்றார்.





தி.தி. தேவஸ்தானத்தாரின்

### ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில்,

திருச்சானூர்.

* * *

### வருடாந்திர பிரம்மோத்ஸவம்

**28-11-94 முதல் 7-12-94 வரை**

**3-12-94** கஜவாகனம்

**6-12-94** திருத்தேர்

**7-12-94** ஸ்ரீபஞ்சமீ தீர்த்தம்

**Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor-Incharge and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507**

